# ஆழ்வார்கள் வரலாற்றுக் கதைகள்



கவிஞர்
தே.ப.பெருமாள்



# ஆழ்வார்கள் வரலாற்றுக் கதைகள்

கவிஞர் தே. ப. பெருமாள்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# முன்னுரை

சைவமும் வைணவமும் இந்து மதத்தின் இரு பிரிவுகளாகும். தேவாரம் பாடிய திருஞானசம்பந்தர்,திருநாவுக்கரசர்,சுந்தரர் ஆகியவர்களும் திருவாசகம் பாடிய மணிவாசகப் பெருமானும் பெரியபுராண நாயன்மார்களும் சைவத்தை வளர்த்தனர். இதுபோன்று பன்னிரு ஆழ்வார்கள் தம் அமுதப் பாசுரங்களாலும் வியத்தகு நிகழ்ச்சி களாலும் மக்களிடையே பக்தியைத் தூண்டி வைணவத்தை வளர்த்தனர். இவர்கள் சாதி சமயங்களையும் பிறவற்றையும் வகை செய் யாது இறைவன் பக்தியில் ஒன்றாக இணைந்த வர்கள்.

ஆழ்வார்களின் பாசுரங்கள் தமிழ் மொழிக்கு ஈடு இணையற்ற செல்வமாகும். தமிழின் இன்பச் சுவையினைப் பிழிந்து தருவன. தமிழிசையும் தமிழ்க்கலையும் சிறந் தோங்கிச் செம்மை நலம் பெற உதவுவன,

ஆழ்வார்களின் தலைவராக நம்மாழ்வாரையே குறிப்பிடுவர். இவரது பக்திப் பெருக்கே ஏனைய ஆழ்வார்களிடமும் காணப் படுகிறது. வைணவப் பெரியோர்கள் இவரை அவயவியாகவும் ஏனைய ஆழ்வார்களை அவயவங்கள் ஆகவும் கொள்வர். இறைவன் எங்கும் நிறைந்தவனாய், எவ்வுயிரிலும் இணைந்தவனாய் உள்ளான் என்றும் இவற்றின் குறைபாடுகள் தம்மைச் சாராதபடி மேலோங்கி நிற்பவன் என்றும் கூறுவர். அப்பெருமான் யாவரிடத்தும் மிக்க கருணையுடையவன் என்பதோடு அனைவரும் தம்மைச் சரணடைந்துய்ய அருள் பாலிப்பவன் என்றும் துன்பம் ஏற்படும் காலம் அத்துன்பத்தினின்றும் உயிர்களைக் காப்பவன் என்றும் திருவாய்மொழியினின்று அறியலாகும் எனச் சான்றோர் உரைப்பர். இவரது பாசுரங்களில் வேதங்களின் சாரம் பிழிந்து தரப்பட்டுள்ளதாகப் பெரியோர் தெரிவிக்கின்றனர்.

பெரியாழ்வார் கண்ணபிரான் அவதார மாண்பில் தோய்ந்தவர்.அவனது பல பருவங்களைப் பாடி அவனது பேரழகை அனுபவிக்கிறார். கண்ணனது திருமேனியழகை இவர் வர்ணிக்கும் திறம் சாலச் சிறந்தது. இவரைப் போலவே குலசேகராழ்வார் இராமவதாரத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர்.

ஆழ்வார்களில் ஏனையவர்கள் தம் வாழ்வு நலனை இறைவன் அருளால் பெற எண்ணிய

வர்கள். ஆனுல் பெரியாழ்வாரோ பரந் தாமன் வாழ்வையே தமக்கு வாய்த்த பேருக எண்ணியவர். இவர் அருளிய 'பல்லாண்டு' இவரது பக்திப் பெருக்கை எடுத்துக் காட்டும்.

திருமழிசையாழ்வார் வரலாறு சுந்தர மூர்த்தி நாயனுரின் வரலாற்றை நமக்கு நினை வூட்டுகின்றது. பக்தன் வேண்டுதலுக்கு இறை வன் இசைந்து அவன் எண்ணத்தைப் பூர்த்தி செய்ததை அறிகிருேம்.சுந்தரருக்கு இறைவர் தூது சென்றதுபோல் திருமழிசையாழ்வார் வேண்டுதலுக்கு இசைந்த நீலத்திருமேனி யான் பாம்பணையைச் சுருட்டிக் கொண்டு கச்சி நகர் விட்டு அப்பால் சென்று பின்னர் ஆழ்வார் வேண்டுதல்படி கச்சி நகர் வந்து பாம்பணையில் படுத்த நிகழ்ச்சியை அறிகி ருேம்.

ஆண்டாள் நீலமேனி நெடியோன் கோல அழகில் ஈடுபட்டு அவனையே வரனுக எண் ணிப் பேறுபெற்றவர். தம் தந்தையார் பெரி யாழ்வார் கட்டிய பூமாலையை அவரில்லாத போது தாம் சூடிப் பார்த்து, 'திருமாலுக்கு நான் இணைதானு?' என்று எண்ணி ஈடுபாடு கொண்டவர். எனவே இவருக்கு சூடிக் கொடுத்தவர் என்ற பெயரும் ஆயிற்று. இவர் இறைவனை எண்ணிப் பாடிய அகத்துறைப் பாசுரங்கள் இன் தமிழ்ச் சுவையைப் பெருக் குவதோடு பக்திச் சுவையையும் பெருக்

குவன. கோகுலத்திலுள்ள ஒரு பெண்ணைகத் தம்மைப் பாவித்து இவர் அருளிய 'திருப் பாவை' மிக்க சுவை கொண்டது...

இவ்வாறே ஒவ்வொரு ஆழ்வார்கள் வாழ்விலும் அவர்களது திருமால் பக்தியைக் காட்டும் நிகழ்ச்சிகள் உருப்பெற்றுள்ளன. அனைவரது பாசுரங்களும் தெய்வமணம் கமழும் அமுதக்கலசங்களாய் அமைந்துள் ளன.

ஏற்கனவே நான் எழுதிய பெரிய புராணக் கதைகளை வெளியிட்ட **வானதி பதிப்பகமே** எனது இந்நூலையும் அழகுற வெளி யிட்டுள்ளது. அதன் உரிமையாளர் திரு. **திருநாவுக்கரசு** அவர்களுக்கும் நூலைச் செப்ப முற அச்சிட்ட **ஸ்ரீகோமதி அச்சகத்தார்க்கும்** என் அன்பு கலந்த நன்றி.

சென்னை
*15-11-83* தே. ப. பெருமாள்

## உள்ளுறை

# 1. பொய்கையாழ்வார்

தொண்டை நாடு அனைத்து வளங்களும் நிரம்பியது. இப்பூவுலகிற்கு ஒரு திலகம் போல் திகழ்வது, இங்குள்ள நகர்களில் சிறந்த நகராகவும், புனிதத் திருப்பதியாகவும் புலவர்களால் போற்றிப் புகழப் படுவது காஞ்சீ நகர் ஆகும். வேகவதி என்னும் ஆறு பாய்ந்து கண்கவரும் கவினைப் பொழிவது இந்நகர், இத்திருநகரில் திருவெஃகா என்னும் திருத்தலம் ஒன்றுண்டு. இதன் வட புறத்தில் ஒரு அழகிய தாமரைப் பொய்கை. இது மிகத் தெளிந்த நீரினைக் கொண்டது.

இப்பொய்கையில் பூத்த தாமரை மலர் ஒன்றிலிருந்து துவாபுரயுகத்தில், சித்தார்த்தி ஆண்டில் ஐப்பசித் திங்கள் வளர்பிறையில், செவ்வாய்க்கிழமை திருவோண நட்சத்திரத்தில் நீலமேனி நெடியோனின் ஐந்து படைகளில் ஒன்ருன பாஞ்ச சன்னியம் என்னும் திருச்சங்கின் அம்சமாய் ஒரு மைந்தர் அவதரித்தார். பொய்கையில் அவதரித்த இவருக்குப் பொய்கையாழ்வார் என்னும் திருப்பெயர் ஆயிற்று.

### பரந்தாமனிடம் பற்று

இவர் உலகப்பற்றைத் துறந்து, பரந்தாமனிடம் நீங்காத பற்றுடையவராய் இருந்தார். தம் தோள்கள் அப்பெருமானையே தொழும் என்றும், தம் காதுகள் அவனது சிறப்பினையே கேட்கும் என்றும் தமது நா அவனது திருவடிப் புகழையே கூறும் என்றும் சொல்லி, திருமால் பெருமானைச் சேவிப்பார். அவனை அண்டியவர் தீவினையை அடையார் என்பார். கொடிய நரகைச் சேரார் என்பார். நினைப்பதற்கும் அரியவனை, நெடுந்தொலைவில் உள்ளவனைக் கையெடுத்துத் தொழின் அவன் அணித்து வருவான் என்றும், அல்லல் வினையைத் தீர்ப்பான் என்றும் அகிலத்தவர்க்கு அருளி, இவர் முத்தி நெறியைக் காட்டினர்.

தம் நெஞ்சை நோக்கி,

**"நன்று பிணி மூப்பு கையகற்றி நான்கு ஊழி**
**நின்று நிலம் முழுதும் ஆண்டாலும்—என்றும்**
**விடல் ஆழி நெஞ்சமே! வேண்டினேன் கண்டாய்**
**அடல் ஆழி கொண்டான்மாட்டு அன்பு"**

என்று இவர் தாம் பாடியருளிய முதல் திருவந்தாதி பாடல் ஒன்றிலிருந்து எம்பெருமானிடம் இவர் கொண்டிருந்த ஆழமான பக்தியை உணர்ந்து கொள்ளலாம்.

### இவரால் பாடப்பெற்ற திருத்தலங்கள்

திருவரங்கம், திருவிண்ணகர், திருக்கோவலூர், திருவெஃகா, திருவேங்கடம், திருப்பாற்கடல், பரமபதம் முதலிய திருத்தலங்களை இவர் பாடியுள்ளார்.

## வாழ்த்துப் பாடல்

செய்யதுலா வோணத்திற் செகத்துதித்தான் வாழியே
திருக்கச்சி மாநகரம் செழிக்கவந்தோன் வாழியே
வையந்தகளி நூறும் வகுத்துரைத்தான் வாழியே
வனச மலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே
வெய்யகதி ரோன்தன்னை விளக்கிட்டான் வாழியே
வேங்கடவர் திருமலையை விரும்புமவன் வாழியே
பொய்கைமுனி வடிவழகும் பொற்பதமும் வாழியே
பொன்முடியும் திருமுகமும் பூதலத்தில் வாழியே.



# 2. பூதத்தாழ்வார்

சிறப்பு மிக்க தொண்டை நாட்டில் கீழக்கடற் கரையில் அமைந்து விளங்குவது திருக்கடல் மல்லை என்னும் திவ்வியப்பதி. இது மாமல்லபுரம் என்றும் மகாபலிபுரம் என்றும் வழங்கப்படுகின்றது. இப்பதி தெய்வீகச் சிறப்போடு வரலாற்றுப் பெருமையும் கொண்டது.

பல்லவ மன்னர்கள் தம் ஆட்சிக் காலத்தில் இங்கு மலைகளைக் குடைந்து கோயில்களை உருவாக்கினர்கள். அற்புதமான சிற்பங்களை அமைத்துச் சிந்தை மகிழ்ந் தார்கள். நரசிம்ம பல்லவன் தன் காலத்தில் உலகமே வியந்து போற்றத் தக்கவண்ணம் மலைகளை வெட்டி, ஆலயங்கள், சிலைகள், சிற்பங்கள் ஆகிய வற்றை உருவாக்கி இறவாப் புகழ் பெற்றுள்ளான்.

பிற திருப்பதிகளில் பாம்பணையில் பள்ளிகொண்டு காட்சி அளிக்கும் பெருமான், இப்பதியில் தலத்தி லேயே பள்ளி கொண்டுள்ளார். எனவே இவரது திருநாமம் 'தலசயனத் துறைவார்' என்பதாகும். எனவே இப்பதியினைப் பெரியோர்கள் 'கடல் மல்லைத் தலசயனம்' என்றழைப்பர்.

இங்குக் குருக்கத்தி (மாதவி) மலர்ப்பந்தர் ஒன்று செழுமையுடன் வளர்ந்தோங்கி நின்றது. இதிலுள்ள சிறப்பு மிக்க ஒருமலரில், துவாபர யுகம் சித்தார்த்தி ஆண்டில் ஐப்பசித் திங்கள் நவமி அவிட்ட நட்சத்திரத்தில் திருமாலின் ஐம்படைகளில் ஒன்முன கௌமோதகி என்னும் கதாயுதத்தின் அம்சமாகப் பூதத்தாழ்வார் அவதரித்தார். இக்காலத்தை கி. பி. ஏழாம் நூற்ருண்டின் இடைப்பகுதி என்பர்.

இவர் திருமாலையே தம் உள்ளக் கோவிலில் அமைத்து வழிபட்டு வந்தார். இப்பேறு தமக்கு இறையருளால் வாய்த்த பேறு எனக் கருதினுர். இச்சேவை நரகத் துயரை ஒழித்து, அப்பெருமான் திருவடிகளில் தம்மைச் சேர்க்கும் எனக் கண்டார். இவர் தாம் அருளிச் செய்த இரண்டாம் திருவந்தாதியில் தம் நெஞ்சை நோக்கி,

> **"இதுகண்டாய் நல்நெஞ்சே! இப்பிறவி ஆவது**
> **இதுகண்டாய் எல்லாம்நாம் உற்ற(து)—இதுகண்டாய்**
> **நாரணன்பேர் ஓதி நரகத்து அருகணையா**
> **காரணமும் வல்லையேல் காண்"**

என்று கூறுவார்.

இனிய தமிழில்—ஞானத்தமிழில் இவர் பாமாலை பாடிப் பரந்தாமனை வாழ்த்துவார். இது தமது தவப் பேருல் வாய்த்தது என்பார்.

> **"யானே தவம்செய்தேன்; ஏழ்பிறப்பும் எப்பொழுதும்**
> **யானே தவம்உடையேன் எம்பெருமான் —யானே**
> **இருந்தமிழ்நல் மாலை இணையடிக்கே சொன்னேன்**
> **பெருந்தமிழன் நல்லேன் பெருகு."**

பெருந்தமிழனுய் — நல்லவனுய்ப் பிறந்த பேறு இறைவன் அருளால் ஏற்பட்டது. அவ்வருளே அப் பெருமான் திருவடிகளுக்கு என்னைப் பாமாலை சூட்ட வைத்தது என எண்ணி ஆழ்வார் பெருமான் ஆனந்தப் பரவசத்தில் தோய்வார்.

பெருமானைக் கைதொழுது வணங்கிப்பெற்ற யான் இம்மண்ணுலகை ஆள்வதும் விரும்பேன்; வான வர்க்கே வானவராய் அமையும் விண்ணுலக வாழ்வை யும் வேண்டேன் என்பார்.

**''மண்ணுலகம் ஆளேனே: வானவர்க்கும் வானவனுய்**
**விண்ணுலகம் தன்அகத்தும் மேவேனே—நண்ணித்**
**திருமாலை, செங்கண் நெடியானை, எங்கள்**
**பெருமானைக் கைதொழுத பின்''**

இவ்வாறு பூதத்தாழ்வார் ஞானத்தமிழ்ப் பாமாலையால் நாரணனைப் பாடி உள்ளம் உருகிக் கரைவார், அப்பெருமானைச் சேவித்து ஆனந்தக் கண் ணீர் சொரிவார். பரந்தாமப் பெருமான்மீது இவர் கொண்டுள்ள பற்றைக் கண்ட பிறர்,''இவர் சாதாரண மனிதர் அல்ல. மக்களில் மேம்பட்ட மகான், எம் பெருமான் அருளைப் பெற்ற திருவருட் செல்வர்.'' என்று போற்றி வணங்குவார்கள்.

### இவரால் பாடப்பெற்ற திருத்தலங்கள்

திருவரங்கம், தஞ்சை, திருக்குடந்தை, திருத்தண் கால், திருக்கோட்டியூர், திருமாலிருஞ்சோலை, திருக் கோவலூர், திருக்கடன்மல்லை, திருப்பாடகம், திருக் கச்சி, திருநீர்மலை, திருவேங்கடம், திருப்பாற்கடல் ஆகிய தலங்கள் இவரால் பாடப்பெற்றவை,

## வாழ்த்துப் பாடல்

அன்பேத களிநூறும் அருளினுன் வாழியே
ஐப்பசியில் அவிட்டத்தில் அவதரித்தான் வாழியே
நன்புகழ்சேர் குருக்கத்தி நாண்மலரோன் வாழியே
நல்லதிருக் கடன்மல்லே நாதனுர் வாழியே
இன்புருகு சிந்தைதிரி இட்டபிரான் வாழியே
எழில்ஞானச் சுடர்விளக்கை ஏற்றிஞன் வாழியே
பொன்புரையும் திருவரங்கர் புகழுரைத்தான் வாழியே
பூதத்தார் தாளிணேகள் பூதலத்தில் வாழியே!

# 3. பேயாழ்வார்

**தொ**ண்டை நாட்டிலுள்ள வைணவத் திருப்பதி களுள் மிக்க புகழ்பெற்றவைகளில் ஒன்று 'அல்லிக் கேணி' என்பது. இப்பெயரே திருவல்லிக்கேணி என வழங்கிவருகின்றது. இப்பதிக்குத் துளசிவனம் என்றும் ஒரு பெயர் உள்ளதாகத் தலபுராணம் தெரிவிக்கும்.

இத்திருவல்லிக்கேணி சோலைகள் நிரம்பியது. இச் சோலைகளில் குரவமலர் விரிந்து மணம் வீசும், குயில் கள் இசைநாதம் பொழியும். மயில்கள் நாட்டிய விருந் தளிக்கும்.

இத்தகைய சிறப்பு மிக்க ஊருக்குத் தென்பகுதி யில் அமைந்துள்ளது திருமயிலை என்னும் திருநகர். இதுவே திருவல்லிக்கேணிக்குத் தலைநகராகவும் இருந் துள்ளது. மாடமாளிகைகளால் நிரம்பியது இந்நகர். பொதுமறை என உலகம் போற்றும் திருமறையாகிய திருக்குறள் நூலை அருளிய தெய்வப் புலவர் திருவள்ளு வர் இந்நகரிலேயே தோன்றியதாக அறிஞர் கூறுவர். அவர் கோயில் கொண்டுள்ள திருநகராகவும் இது திகழ்கின்றது.

இம்மயிலைத் திருநகரில், வைணவத் திருக்கோயிலான ஆதிகேசவப்பெருமாள் ஆலயத்திலுள்ள திருக்கிணற்றில் அழகும் அருமையும் கொண்ட செவ்வல்லி மலர் மலர்ந்திருந்தது. இம்மலரில் துவாபர யுகத்தில், சித்தாத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் வளர்பிறையில் சதய நட்சத்திரத்தில் திருமாலின் ஐம்படைகளில் ஒன்றான நாந்தகம் என்னும் வாளின் அம்சமாய் பேயாழ்வார் அவதரித்தார்.

இவர் பரந்தாமனின் திருவருளால் இளம்பருவத்திலேயே கல்வி நலமும் புலமைத் திறமும் பெற்று விளங்கினார். இவர் திருமாலிடம் பக்திகொண்டு, அவரை நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்திடுவார். அப்பெருமான் பெருங்கருணைத் திறனை வியந்து மகிழ்வார். அப்பெருமானைத் தேன் தமிழ்ப் பாக்களால் பாடிப் பாடிப் பரவசம் கொள்வார். அவன் திருக்கோலத்தை அகக்கண்களில் உருவகம் செய்து, அதை நெஞ்சத்தில் நிறுத்திப் பூரிப்பார். "திருமால் பெருமான் மேகம் போன்ற நிறத்தைக் கொண்டவன்; கடல்நீர் போன்ற நீல நிற மேனியன். அவன் திருக் கண்களும் திருக்கரங்களும் கமல மலராகவன்றோ உள்ளன. அவனது திருவடிகளும் அம்மலர்கள்தாமே. ஆகா, என்னே அவனது திருமேனி அழகு!" என்று வியந்து வியந்து மெய்சிலிர்ப்புக் கொள்வார், தமது மூன்றாம் திருவந்தாதியில்,

**"கண்ணும் கமலம்; கமலமே கைத்தலமும்**
**மண் அளந்த பாதமும் மற்று அவையே—எண்ணில்**
**கருமா முகில்வண்ணன், கார்க்கடல்நீர் வண்ணன்**
**திருமா மணிவண்ணன் தேசு"**

என்று பாடுவார்.

“அப்பெருமானை வாழ்த்துகின்ற நாளே நல் நாளாகும். அப்பெருமான் இணையடிக்கே ஆளாகி, என் வாயே, அவனை என்றும் மறவாது வாழ்த்துக!” என்று வாய்க்குக் கூறுவதுபோல் கூறுவார்.

**“சென்றநாள், செல்லாத செங்கண்மால் எங்கள்மால்**
**என்றநாள் எந்நாளும் நாளாகும்—என்றும்**
**இறவாத எந்தை இணையடிக்கே ஆளாய்**
**மறவாது வாழ்த்துகஎன் வாய்”**

‘எதிலும் ஐயம் கொள்ளாது தண்துழாய் மாலை யணிந்த பெருமான் திருவடி மலர்களைத் தொழுங்கள். உங்கள் வினைகள் அனைத்தும் ஒழிந்து உங்கட்கு உய்வு கிடைக்கும்’ என அவர் உலகினருக்கு அறிவுறுத்து கின்றார்.

**“அதுநன்று, இதுதீது என்று ஐயப்படாதே**
**மதுநின்ற தண்துழாய் மார்வன்—பொதுநின்ற**
**பொன்அம் கழலே தொழுமின்; முழுவினைகள்**
**முன்னம் கழலும் முடிந்து”**

## பாடப்பெற்ற திருத் தலங்கள்

திருவரங்கம், திருக்குடந்தை, திருவிண்ணகர், திரு மாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர், அட்டபுயகரம், திருவேளுக்கை, திருப்பாடகம், திருவெஃகா, திரு வல்லிக்கேணி, திருக்கடிகை, திருவேங்கடம், திருப்பாற் கடல், பரமபதம் ஆகியனவாகும்.

## வாழ்த்துப் பாடல்

திருக்கண்டேன் எனநூறும் செப்பினுன் வாழியே
　　சிறந்தஐப்ப சியிற்சதயம் செனித்தபிரான் வாழியே
மருக்கமழும் மயிலைநகர் வாழவந்தோன் வாழியே
　　மலர்க்கரிய நெய்தல்தனில் வந்துதித்தான் வாழியே.
நெருக்கிடவே இடைகழியில் நின்ற செல்வன் வாழியே
　　நேமிசங்கன் வடிவழகை நெஞ்சில் வைப்போன்
　　　　வாழியே
பெருக்கமுடன் திருமழிசைப் பிரான் தொழுவோன்
　　　　வாழியே
　　பேயாழ்வார் தாளிணை இப்பெருநிலத்தில் வாழியே.

## திருக்கோவலூரில் முதலாழ்வார்கள்

முதலாழ்வார்கள் என்று போற்றும் சிறப்புமிக்க பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியவர்கள் காலத்தால் முற்பட்டவர்கள். ஏனைய ஆழ்வார்கள் அருளிய பிரபந்தங்களுக்கெல்லாம் இவர்கள் அருளிய திரு அந்தாதிப் பிரபந்தங்கள் இலக்கணம் போல் ஒளிர்வன எனப் பெரியோர் கூறுவர்.

''மற்றுள்ள ஆழ்வார்க ளுக்குமுன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த-பெற்றி
　　　　மையோர்
என்றுமுத லாழ்வார்கள் என்னும் பெரியவர்க்கு
நின்றதுல கத்தே நிகழ்ந்து.''

என்ற பாடல் முதலாழ்வார்கள் சிறப்பைப் புலப் படுத்தும்,

இவ்வாழ்வார்கள் மூவரும் சமகாலத்தவராய் இருந்தும் ஒருவரை மற்றவர் அறியாதிருந்தனர். இவர்கள் ஊர் ஊராகச் சென்று அங்கங்குள்ள திருக்கோயில்களில் கோயில் கொண்டுள்ள திருமால் பெருமானைத் தரிசித்து வந்தார்கள்.

இவ்வாறு நாட்கள் கழிந்து வருகையில் அருள் பெருமானாகிய மாலவன், இவர்கள் மூவரையும் ஒன்றாக இணைத்து, இவர்களால் உலக மக்களின் அறியாமையைப் போக்கி, அவர்கள் நெஞ்சங்களில் ஞான ஒளியை ஏற்றி உய்விக்கத் திருவுளம் கொண்டார். எனவே அப்பெருமான் இம்மூவருக்கும் திருக்கோவலூர் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தைத் தோற்றுவித்தருளினான். ஆழ்வார் மூவரும் தனித்தனியாகத் திருக்கோவலூர் சென்றடைந்தார்கள்.

அங்குக் கோயில் கொண்டுள்ள உலகளந்த பெருமாளைச் சேவித்துச் சிந்தை மகிழ்ந்தார்கள். அப்பெருமான் திருவழகில் மெய்மறந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள். பகற் பொழுது கழிய அந்திமாலை வந்தது. பறவைகள் இரவுப் பொழுதைக் கழிக்க, கூட்டை நோக்கிப் பறந்து திரும்பின. மாலை நேரத்தில் வீசிய மெல்லிய பூங்காற்று குளிர் காற்றாய்த் திடீரென மாறிக் கொண்டிருந்தது.

இம்மூவருள் பொய்கையாழ்வார் முதன் முதலாக ஒரு வைணவர் திருமாளிகைக்குச் சென்றார். அங்கு அவரது இசைவு பெற்று இடை கழியில் படுத்துக் கொண்டார். இதே மாளிகையில் பூதத்தார் வந்து, "இங்கு தங்க இடம் கிடைக்குமோ?" என்று கேட்க,

பொய்கையார் அவரை வரவேற்றுத் தம்முள் வணங்கி அறிமுகமாகிக் கொள்கிறார், பின்னர் அவரிடம் தாம் தங்கியுள்ள இடத்தில், "ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்" என்று சொல்லி அவரை அங்கே அமர்ந்து கொள்ள வேண்டிக் கொண்டார். பூதத்தாழ்வாரும் அவ்வாறே அமர்ந்து கொண்டார். அப்போது பேயாழ்வாரும் அங்கு வருகிறார். பூதத்தாழ்வார் போன்று தமக்கு இடம் கிடைக்குமோ என்று கேட்கப் பொய்கையாழ்வார் அவரையும் வரவேற்றுக் கொள்கிறார். அவர்கள் தங்களுக்குள் வணக்கம் செய்து ஒருவருக்கொருவர் அறிமுகமாகிக் கொள்கிறார்கள். ஏனைய இரு ஆழ்வார் களும் பேயாழ்வாரிடம், "இங்கு ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்;" என்று சொல்லி இருவரும் எழுந்து நின்றார்கள். பூதத்தாழ் வாரும் அவர்களுடன் சேர்ந்து நின்று கொண்டார். மூவரும் மகிழ்ச்சியோடு நின்று, மாலவன் பேரருள், குணச் சிறப்புகளைச் சொல்வதும் கேட்பதுமாக தெய்வீக நினைவுகளில் திளைத்திருந்தார்கள்.

திருமால் பெருமான் இவர்களுக்கு அருள் சுரக் கும் எண்ணத்தோடு வெளியே பேரிருளையும் பெருமழையையும் உண்டாக்கினார். இம்மூவரிடையே தாமும் வந்து நின்று கொண்டு தாங்க இயலாத நெருக்கத்தை அங்கே செய்தருளினார்.

ஆழ்வார்கள் இது கண்டு வியப்புக்கொண்டார் கள். அவர்கள் தங்களுக்குள், "இதுவரையிலும் இல்லாத நெருக்கம் இப்போது எப்படி ஏற்பட்டது? வேறு யாரேனும் இங்கு வந்து நிற்கிறார்களோ?" என்று கேட்டுக் கொள்கிறார்கள்.

பின்னர் ஆழ்வார்கள் மூவரும் தம் ஞானச் சுடர் விளக்கைத் தூண்டி, அதன் பேரொளியில் (மெய்ம்மை உணர்வில்) பரந்தாமன் திருவடிவப் பேரழகைக் கண்டு பரவசத்தில் ஆழ்ந்தார்கள். அந்த ஆனந்தப் பரவசத்தை ஞானத் தமிழ்ப் பிரபந்தமாக வெளியிட்டு மக்களுக்கு உய்வளிக்கக் கருதினார்கள்.

திருமாலின் தேசுமிக்க தெய்வீக வடிவழகை அனுபவித்துத் திளைத்த பொய்கையாழ்வார்,

**''வையம் தகளியா, வார்கடலே நெய் ஆக,
வெய்ய கதிரோன் விளக்கு ஆக—செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடர் ஆழி நீங்குகவே என்று''**

எனத் தொடங்கி,

**ஓர் அடியும் சாடுஉதைத்த ஒண்மலர்ச் சேவடியும்
ஈர் அடியும் காணலாம் என்நெஞ்சே!—ஓர் அடியில்
தாயவனை, கேசவனை, தண்துழாய் மாலைசேர்
மாயவனையே மனத்து வை''**

என்று முடியும் நூறு பாடல்களைக் கொண்ட அந்தாதியைப் பாடியருளினார். இவர் முதலில் தொடங்கி அந்தாதி பாடியதால் இது முதல் திருவந்தாதி எனப் பட்டது.

அடுத்து, பூதத்தாழ்வார் மாலவன் மீதுள்ள ஈடுபாட்டுணர்வில் தோய்ந்து அனுபவித்த அனுபவத்தை

**''அன்பே தகளியா, ஆர்வமே நெய் ஆக
இன்பு உருகு சிந்தை இடுதிரியா—நன்புஉருகி
ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்''**

என்று தொடங்கி,

**"மாலே! நெடியோனே! கண்ணனே! விண்ணவர்க்கு**
**மேலா! வியன்துழாய்க் கண்ணியனே!—மேலால்**
**விளவின் காய்கன்றினால் வீழ்ததவனே! என்தன்**
**அளவன்றால் யானுடைய அன்பு"**

என்று முடியும் திருவந்தாதியைப் பாடியருளினார். இரண்டாவதாக இது பாடப்பெற்றதால் இரண்டாம் திருவந்தாதி எனப்பட்டது.

பேயாழ்வார் தாம் தெளிவாகக் கண்ட இறைவனின் திருக்காட்சியைத் தெரிவிக்கும் பாங்கில்,

**"திருக்கண்டேன்; பொன்மேனி கண்டேன்; திகழும்**
**அருக்கன் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்**
**பொன் ஆழி கண்டேன்; புரிசங்கம் கைக்கண்டேன்**
**என் ஆழி வண்ணன்பால் இன்று"**

என்ற பாடலை முதலாகக் கொண்டு,

**"சார்வு நமக்கு என்றும் சக்கரத்தான் தண் துழாய்த்**
**தார்வாழ் வரைமார்பன் தான்முயங்கும்—கார் ஆர்ந்த**
**வான்அமரும், மின் இமைக்கும் வண்தாமரை நெடுங்கண்**
**தேன்அமரும் பூமேல் திரு"**

என்று மூன்றாம் திருவந்தாதியின் நூறாவதாக இறுதிப் பாடலைப் பாடியருளினார்.

இவ்வாறு முதலாழ்வார்கள் மூவரும் இரவில் எம்பெருமான் திருவண்ணம் கண்டு போற்றிப் பாடிய அற்புதத்தை,

**"பாவரும் தமிழால் பேர்பெறு பனுவல்**
**பாவலர் பாதி நாளிரவில்**
**மூவரும் நெருக்கிமொழி விளக்கேற்றி**
**முகுந்தனைத் தொழுத நன்னாடு"**

என்று வரந்தருவார் சிறப்பித்துக் கூறுவார்.

# 4. திருமழிசையாழ்வார்

புலவர் பாடும் புகழமைந்தது தொண்டை நன்னாடு. இந்நாட்டில் கடலுக்கு மேற்காகவும், காஞ்சித் திருநகருக்குக் கிழக்காகவும் உள்ள திருப்பதி திருமழிசை. மாதவ முனிவர்கள் இங்கு வந்து தவமியற்றி உய்வு பெறும் மேம்பாடு கொண்டது இத்திருத்தலம்.

இத்திருத்தலத்தில் பார்க்கரர் என்னும் முனிவர் ஒருவர் 'தீர்க்க சத்திரயாகம்' என்ற வேள்வியைச் செய்து திருமாலை வழிபட்டுப் பெருந்தவம் புரிந்து வந்தார். இதைப் பொறுத்துக் கொள்ளாத தேவர் கள் இவர்மீது பொறாமை கொண்டனர். இவரது தவத்தை எப்படியும் கலைத்து விட முடிவு செய்து, அதற்காக வானுலக அழகு மங்கையரை இப் பூவுலகுக்கு அனுப்பி வைத்தனர். அப்பெண்கள் தம் ஆற்றல் அனைத்தையும் காட்டி முனிவரை மயக்க முயன்றும் முடியாதாயினர். தம் முயற்சியில் தோல்வி யுற்ற அம்மங்கையர்களில் ஒருத்தியைத் தவிர ஏனையவர்கள் தங்கள் இருப்பிடம் ஏகினர்.

வானுலகு செல்லாது இங்குத் தங்கிய மங்கை கனகாங்கி என்னும் பெயரினள். மாயை புரிவதில் வல்லவள். ஆடல் பாடலில் அற்புதத் தேர்ச்சி இவளுக்கிருந்தது. இவள் தனது ஆற்றல் அனைத்தையும் காட்டி அருந்தவ முனிவர் பார்க்கவரின் தியானத்தைக் கலைக்க முற்பட்டாள். இவளது முயற்சி வெற்றியைத் தந்தது.

கனகாங்கியின் இன்னிசைப் பாடலைக் கேட்டுத் தியானம் கலைந்த முனிவர் பார்க்கவர் கண்விழித்துப் பார்த்தார். கவின்மிக்க மங்கை ஒருத்தி எதிரே நிற்பதைக் காண்கிறார். அவளது அழகு முனிவரை மயக்கியது. அவர் கனகாங்கியோடு இணைந்து நாட்களை கழித்து வந்தார்.

கனகாங்கி கருவுற்றாள். சித்தாத்திரி ஆண்டு தை மாதம் மக நட்சத்திரத்தில் திருமாலின் சுதர்சனம் என்னும் ஆழி அமிசத்தில் அக்கரு வெளிப்பட்டது. ஆனால் அது குழந்தையின் உருவமில்லாமல் சதைப் பிண்டமாகவே இருந்தது. இதைக் கண்டு பெற்றவளான கனகாங்கி, வெறுப்புக் கொண்டாள். இப்பிண்டத்தை அருகே காணப்பட்ட பிரப்பம் புதர் ஒன்றில் வீசி எறிந்து விட்டுத் தன் இருப்பிடமான அமர உலகு போய்ச் சேர்ந்தாள். முனிவர் பார்க்கவரும் தவம் கலைந்த தம் நிலைக்கு மிக வருந்தி வேறிடம் செல்கிறார். அங்குச் சென்று மீண்டும் தவத்தில் ஆழ்ந்து விடுகிறார்.

### குழந்தைக்குத் திருக்காட்சி

பிரப்பம் புதரில் வீசி எறியப்பட்ட சதைப் பிண்டம், திருவருளால் அழகிய ஆண் குழந்தையாக

உருப்பெற்றது. மற்றக் குழந்தைகளைப் போல் பசியும் தாகமும் அதற்கு ஏற்பட்டு அழுது கொண்டிருந்தது. அருகேயுள்ள கோயிலில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் பிராட்டியாருடன் அங்குத் தோன்றி, அக்குழந்தைக்குத் தம் திருவுருவைக் காட்டி ஆசீர்வதித்து மறைந்தார். குழந்தையோ மறைந்த பெருமானை நினைந்து நினைந்து ஓயாமல் அழுது கொண்டிருந்தது.

**ஆண்டவன் அருட் கொடை**

அவ்வேளை அங்கே பிரம்பு அறுக்க வந்தான் திருவாளன் என்னும் ஒரு வேளாளன். இவன் குழந்தையின் அழுகுரலைக் கேட்டு வியப்படைந்தவனாக அருகே வந்து பார்க்கிறான். அழகிய அக்குழந்தையைக் கண்டு மகிழ்ச்சியும் பூரிப்பும் கொள்கிறான். குழந்தையே இல்லாத அவன் அக்குழந்தையை எடுத்துக் கொண்டு விரைவாகத் தன் வீட்டுக்கு வருகிறான். தனது மனைவி பங்கயச் செல்வியிடம் குழந்தையைக் கொடுத்து அது தனக்குக் கிடைத்த விவரத்தை அறிவிக்கிறான்.

குழந்தையைப் பெற்ற பங்கயச் செல்வி பேரானந்த உணர்வில் திளைக்கிறாள். குழந்தையே இல்லாத தங்களுக்கு ஆண்டவன் அளித்த அருட் கொடையே அக்குழந்தை என எண்ணிக் கொள் கிறாள். குழந்தைப் பாசம் அவளிடம் பொங்கிப் பெருகுகிறது. அருமை பெருமையோடு குழந்தையை வளர்க்கத் தொடங்கினாள். தாய்ப் பாச உணர்வில் அவளிடம் பால் சுரப்பெடுத்தது. ஆனால் அப் பாலைக்

குழந்தை ஏற்றுக்கொள்ளவில்லை. பசியும் தாகமும் அதற்கு ஏற்பட்டால்தானே பாலை உண்ணும்! அக்குழந்தை தூய்மைக் கோலம் கொண்டு விளங்கியது. இவ்வதிசயக் குழந்தை அழுவதை நிறுத்திப் பேசுதலின்றி, எம்பெருமான் நினைவில் தோய்ந்திருந்தது. அதனிடம் தெய்வீக ஒளி வீசியது.

குழந்தையின் இத்தகைய வியத்தகு செயல்கள் ஊரெங்கும் பரவின. மக்கள் கேட்டு இது தெய்வக் குழந்தையே என எண்ணினர். கண்ணுரைக் கண்டு களிப்பு மிகக் கொண்டனர். முதியவர் ஒருவர் தம் மனைவியுடன் இக்குழந்தையைப் பார்க்க வந்தார். குழந்தையைக் கண்ட இவர்கள் எல்லையற்ற மகிழ்வில் திளைத்து இன்புற்றனர். இவர்கள் தாம் கொண்டு வந்திருந்த பாலை, இக்குழந்தையின் பக்கம் வைத்து, அதை அருந்திக் கொள்ள மனக் கனிவும் பக்தியும் கொண்டு வேண்டினர்.

### முதுமை நீங்கி இளமை

இவர்களது திருந்திய அன்பைக் கண்டு பார்க்கவரின் குழந்தையாகிய அப்பிள்ளை, அப்பாலை ஏற்று அமுது செய்தது. அன்றிலிருந்து இவர்கள் நாள் தோறும் இப்பிள்ளைக்குப் பால் கொண்டு வந்து கொடுக்கும் பழக்கத்தை மேற்கொண்டனர்.

ஒருநாள் இப்பிள்ளை தாம் அருந்திய பாலில் மீதியிருந்ததை இத்தம்பதியரை உண்ணக் கூறிற்று. அவர்களும் உள்ளம் மகிழ்ந்து அவ்வாறே செய்தனர். வியப்பளிக்கும் நிகழ்ச்சி ஒன்று அங்கே நடைபெற்றது. என்னவெனில் அப்பாலை உண்ட அளவில் அவ்விரு

வரும் முதுமை நீங்கி இளமை பெற்று எழில் வீசினர். பின்னர் அவர்களுக்கு ஒரு குழந்தையும் பிறந்த.து

இக்குழந்தைக்குப் பெற்ருேர்கள் கணிகண்ணன் என்னும் பெயரைச் சூட்டி அன்போடும் அருமை யோடும் வளர்த்து வந்தார்கள். பார்க்கவ குமாரர் அருளால், அக்குழவி சிறந்த கல்வியும், தெளிந்த ஞானமும் நிறைந்த கடவுள் பக்தியும் கொண்டு வளர்ந்து வந்தது.

**சமய ஆய்வு**

திருவாளனது இல்லத்தில் ஏழுவயதுப் பிராயம் வரை வளர்ந்து வந்த பார்க்கவகுமாரருக்கு இறை வனேச் சேரும் எண்ணம் எழுந்தது. அதை நிறை வேற்ற எச்சமயத்தைச் சார்ந்து ஒழுகுவது எனச் சிந்திக்கலாஞர், இச் சிந்தனேயில் ஈடுபட்ட இவர், பல சமயத் தத்துவங்களேயும் ஆய்ந்து அவ்வவற்றின் ஒழுக் கங்களே மேற்கொண்டு நடந்தார். தாம் கண்டறிந்த உண்மைகளே நூற்களாகவும் இயற்றிஞர். பின்னர் இவருக்குச் சைவசமயம் சிறந்ததெனப்பட்டது. அதைச் சார்ந்து, இவர் தம் பெயரைச் சிவவாக்கியர் என வைத்துக் கொண்டார். சிவபெருமான் சிறப்பினேத் தெரிவிக்கும் நூற்கள் பல இவரால் இயற்றப்பட்டன. அமைதியான ஓரிடத்தில் அமர்ந்து சிவபெருமானேச் சிந்தையில் இருத்தித் தியானித்து வந்தார்.

இவரைப்பற்றிய செய்திகளே முதலாழ்வார்களில் ஒருவரான பேயாழ்வார் அறிகிருர். சிவவாக்கியராகப் பெயர் வைத்துள்ள இவரை வைணவ சமயத்தினராக ஆக்க வேண்டும் என்பது பேயாழ்வாரின் எண்ணம்,

அவர் தம் வாதத் திறமையாலும் ஞானப் பெருக்காலும் சிவவாக்கியரை வைணவராக்கித் தத்துவ உபதேசம் அருளினர். இதிலிருந்து சிவவாக்கியரின் பெயர் திருமழிசைப்பிரான் என ஆயிற்று. பிறகு இவர் திருவல்லிக்கேணி வந்து 'கஜேந்திரசைரஸ்' என்னும் பொய்கைக் கரையில் அமர்ந்து திருமால் பெருமானைத் தியானித்தவாறு யோகத்தில் மூழ்கியிருந்தார்.

### சித்தன் பணிதல்

இவ்வாறு இவர் தியானத்தில் அமர்ந்து யோகத்தில் ஈடுபட்டிருக்கும்போது நிகழ்ச்சியொன்று நடைபெறுகிறது. சுத்திகாரன் என்ற ஒரு சித்தன் தன் திறமையால் புலி ஒன்றை அடக்கி அதன் மீதமர்ந்து வான்வழியே சென்று கொண்டிருந்தான். அவ்வாறு செல்லும்போது அவனது போக்குத் தடைப்பட்டது. இதற்கு என்ன காரணம் என அவன் பார்க்கும் போது, அடியில் யோகத்திலிருந்த திருமழிசைப்பிரானின் சக்தி தான் என்பதை உணருகிறான். வியப்பில் மூழ்கிய அவன், கீழிறங்கி இவர் பக்கம் நெருங்கி இவரது ஆற்றலை மேலும் விளக்கமாய் அறிய விரும்புகிறான்.

சுத்திகாரன் திருமழிசைப் பிரானிடம் வந்து, "மாதவச் செல்வரே, தாங்கள் கந்தையுடையினைக் கட்டியுள்ளீர்கள். அதைக் களைந்துவிட்டு, இதோ நான் தரும் இப்பீதாம்பர உடையை அணிந்து கொள்ளுங்கள்" எனக் கூறிப் பட்டுடை ஒன்றைத் தருவித்துக் கொடுத்தான், திருமழிசைப்பிரான்

அதை ஏற்றுக்கொள்ளாது கதிரவன் ஒளிபோல் ஒளிரும் கவசம் ஒன்றை உருவாக்கி, அவனுக்குக் காட்டினார். இதைக் கண்டு தன்னுள் நாணம் கொண்ட அச்சித்தன் மேலும் சும்மா இருக்கவில்லை. தன் கழுத்தில் அணிந்திருந்த மணிமாலை ஒன்றைக் கழற்றி அதை அவரிடம் நீட்டி, ''இதனைத் தாங்கள் ஜெபமாலையாகத் தரித்துக் கொள்ளுங்கள்'' என வேண்டினான்.

இதுகேட்ட திருமழிசைப் பெருமான் தமது கழுத்தில் அணிந்திருந்த துளசி மணிமாலை, தாமரை மணி மாலை இவற்றை எடுத்துக் காட்டித் தமக்கு மாலை தேவையில்லை என்பதைத் தெரிவித்தார். சித்தன் கண்களுக்கு இம்மாலைகள் இரத்தின மணிமாலை களாகத் தோன்றின, அவனிடம் ஏற்பட்ட வியப்புக்கு ஒரு அளவே இல்லை.

சித்தன் திருமழிசையாழ்வாரிடம், ''நான் சித்தர் பலரையும் வென்றுள்ளேன். ஆனால் தாங்கள் என்னை வென்றுவிட்டீர்கள். தங்களிலும் சிறந்த சித்தர் ஒருவரை நான் கண்டதில்லை'', என்று கூறி வாழ்த்தி வணங்கினான். பின்னர் ஆழ்வாரிடம் விடைபெற்று அவ்வழிவிட்டு வேறு வழியாகச் சென்றான்.

### இரசவாதி

கொங்கணச் சித்தன் என்றொரு இரசவாதி இருந்தான். இவன், இரும்பைப் பொன்னாக்கும் திறன் பெற்றவன். இவன் மழிசைப் பெருமானைக் குறித்துக் கேள்விப்படுகிறான். அவரிடம் வந்து இந்த இரசவாதி

குளிகை ஒன்றைக் காட்டி, "இது இரசகுளிகை. இரும்பை உமது விருப்பம்போல் பொன்னுக்கலாம். இதனை நீர் பெற்றுக் கொள்ளும்" எனக் கூறினுன்.

திருமழிசையாழ்வார், தமக்கு அது தேவையில்லை எனத் தெரிவித்தார். அவர் தமது உடலிலுள்ள புழுதியை எடுத்துச் சேர்த்து, அதை அவனிடம் கொடுத்து, "இக்குளிகையைக் கொண்டு பலகோடிக் கற்களைப் பொன்னுக்கலாம். இதனைக் கொண்டு சென்று உனது வாழ்வை நடத்திக்கொள்" என உரைத்து அதை அவன் கையில் கொடுத்தார். இரசவாதி அதைப்பெற்றுச் சோதித்துப் பார்த்தான். அது மழிசைப்பிரான் சொன்னதுபோல் இருக்கக் கண்டு வியப்படைந்தான். பக்தியும் பற்றும் கொண்டு அவன் மழிசைப்பிரானை வணங்கிச் செல்லலுற்றுன்.

**ஆழ்வார்கள் சேர்தல்**

இதன் பின்னர் திருமழிசையாழ்வார் ஒரு மலைக் குகையினுட் சென்று தியானத்தில் ஈடுபட்டிருந்தார். திருத்தல யாத்திரை செய்து வருகின்ற முதலாழ்வார்கள் மூவரும் இக்குகையின் பக்கமாக வந்தனர். திருமழிசைப் பெருமானிடமிருந்து வீசிய ஒளியை வெளியிலிருந்து இவர்கள் கண்டு வியப்படைந்தவாறு அக்குகையினுட் செல்கின்றனர் மூவரும் இவர் நலம் கேட்டுக்கொள்ள, இவர் அவர்கள் நலம் உசாவ, நால்வரும் ஒரு மனப்பட்டு இணைந்தனர். இவர்கள் எம்பெருமானை நினைத்தல், அவன் புகழ் கேட்டல், அவனையே வாழ்த்துதல் போன்ற திருப்பணிகளில் தோய்ந்திருந்தனர். சில நாட்கள் இவ்வாறு கழியவே, பின்னர் நால்வரும் பேயாழ்வார் அவதரித்த திருமயிலை

வந்து சிறிது காலம் யோக நிலையில் மூழ்கியிருந்தார். பின்னர் முதலாழ்வார் மூவரும் திருத்தல யாத்திரை செய்யச் செல்வாராயினர்.

திருமழிசையாழ்வார் தம் ஊருக்குத் திரும்பிவந்த போது அவருக்குத் திருமண் கிடைக்கவில்லை. இதனால் அவர் கவலைகொண்டு கலங்கினார். அப்போது இவரது கனவில் திருவரங்கப்பெருமான் தோன்றி, 'கச்சி வெஃகாவை அடுத்த பொற்றாமரைக் குளத்தில் திருமண் உள்ளது' எனத் தெரிவித்தருளினார். களிப்பில் மூழ்கிய திருமழிசைப்பிரான், பெருமான் அருளை வியந்து கொள்கிறார். எம்பெருமான் அருளிய வாறு அங்குச் சென்று திருமண் கண்டெடுத்து வந்து தரித்துக்கொள்கிறார். சில நாட்கள் இவ்வாறு கழி கின்றன. பிறகு இவர் தம்பதியை விட்டுக் காஞ்சிநகர் செல்கிறார். அங்குத் திருவெஃகாவில் பள்ளி கொண்டுள்ள அனந்த சயனப் பெருமானைத் தியானித்துத் தம் நாட்களைக் கழித்துக் கொண்டி ருந்தார்.

### முதியவள் பெற்ற பேறு

இவர் அருளால் பிறந்த கணிகண்ணர் இந்நாளில் இவர் இருக்குமிடம் வந்து, இவருக்கு வேண்டிய திருத் தொண்டுகள் செய்து கொண்டிருக்கிறார். இக்காலம், உடல் தளர்ந்து முதுமையான கிழவி ஒருத்தி, திருமழிசைப் பெருமானிடம் பக்திகொண்டு, அவர் இருக்குமிடத்தை அலகிட்டு மெழுகித் தூய்மைப் படுத்தி வந்தாள். ஆழ்வார் பெருமான் ஒருநாள் கண் விழித்த நேரத்தில், அக்கிழவி அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, தனக்கு என்றும் மாறாத இளமை

வாய்க்க வரம் கேட்டுப் பெறுகிருள். அழகில் மிகுந்து விளங்கிய அவள், அமர உலகு மங்கைபோல் திகழ்ந்தாள்.

ஒருநாள் இப்பேரழகியை அந்நகர் அரசனுகிய பல்லவராயன் காண்கிறுன். இப்பெண்ணின் இளமையும் எழிலும் அவனே மயக்கின. அவள்மீது காதல் கொண்ட அவன். அழகு மிக்க அணிகலன்களேயும், ஒளி மிக்க உடைகளேயும் அளித்து அவளே மணம் செய்து கொள்கிறுன். அவளேப் பட்டத்தரசி யாக்கி அவளுடன் இன்பமாக நாட்களேக் கழித்து வருகிறுன்.

**மன்னன் வேண்டுதல்**

இவ்வாறு நாட்கள் கழிந்து வருகையில் தன் இளமை நலம் குறைந்துகொண்டு வருவதையும், தன் மனேவியின் பருவம் நிலேமாருதிருப்பதையும் கண்டு அவளிடம் அதன் காரணத்தைத் கேட்கிறுன் மன்னவன். அவள் தன் கணவனிடம் தனக்குக் கிடைத்த ஆழ்வாரின் அருளேக் கூறுகிருள். தானும் அவ்வருளேப் பெறுகின்ற வழியைத் தன் மனேவியிடம் அரசன் கேட்கிறுன். அவள் தன் நாயகனிடம் "நம் மாளிகைக்கு நாள்தோறும் பிச்சை ஏற்க வருகின்ற கணிகண்ணர் என்பவர் ஆழ்வார் பெருமானின் அன்புக்குரியவர். அவரைக் கொண்டு ஆழ்வாரை அணுகிஞல் தங்கள் மன எண்ணம் நிறைவேறும்" எனத் தெரிவிக்கிருள்.

தன் மனேவியின் மொழிகளேக் கேட்ட மன்னன் இது எளிதில் நடைபெற்றுவிடும் எனத் தன் மனத்துள் எண்ணிக் கொள்கிறுன். மறுநாள் கணிகண்ணர்

மாளிகைக்கு வந்தபோது மன்னன் அவரை அன்புடன் வரவேற்று, "பெரியீர், உமது குருவை நான் பணிந்து வணங்க அவரை இங்கே அழைத்து வரவேண்டும்" என வேண்டுகிறான்.

இவ்வேண்டுதலைக் கேட்ட கணிகண்ணர், "எம் குருநாதர் தம் இருப்பிடத்தைவிட்டு எங்கும் எழுந் தருளார்" என மன்னனிடம் பதிலளித்தார்.

"அவ்வாறாயின் என்னையேனும் அங்கு அழைத்துச் சென்று, அவரது அன்புக்கு ஆளாக்கி, எனக்கு என்றும் மாறாத இளமை வாய்க்க, அவரை அருள்பாவிக்கச் செய்யவேண்டும்" என வேண்டினான் மன்னன்.

"மன்னவ, உம்மைப்போன்று இவ்வுலக வாழ்வில் இன்பம் விழைவாரை எம் குருநாதர் மதிப்பதே இல்லை" என மறுமொழி கொடுத்தார் கணிகண்ணர்.

கணிகண்ணர் கூறியவற்றைக் கேட்ட மன்னன் மனம் மிக வருந்தினான். தன் எண்ணம் ஈடேற வழி யில்லையே என ஏங்கினான். அப்போது அரசனது அமைச்சர்கள் அங்கே வந்து அவனுக்குத் தேறுதல் மொழிகள் கூறினார்கள். மேலும் அவர்கள் தம் அரச னிடம், "மன்னர் பெருந்தகையே, இக்கணிகண்ணர் தெய்வப் புலமையுடையவர். தங்கள் விருப்பம் நிறைவேற இவர் தம் திருவாயால் தங்களைப் பாடி னாலே போதும். தாங்கள் விரும்பியது வாய்க்கும்" எனக் கூறினார்கள்.

அமைச்சர்களின் இம்மொழி கேட்டு மன்னன் சற்று ஆறுதல் பெற்றான். கணிகண்ணரைக் கொண்டு தம் விருப்பத்தை எளிதாக நிறைவேற்றிக் கொள்ள

லாம் எனவும் மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந் தான்.

அடுத்த நாள் கணிகண்ணர் அங்கு வந்தபோது, அரசன் அவரிடம், "எனது விருப்பத்தைத் தாங்களே நிறைவேற்ற வேண்டும். எனக்கு மாருத இளமை வாய்க்கத் தாங்கள் என்னைக் குறித்துக் கவிபாட வேண்டும்" என வேண்டினன்.

அதற்கு அவர் அரசனிடம், "மன்னவ, யான் திருமாலையன்றி மனிதரைப் பாடேன்" எனப் பதிலி றுத்தார். மன்னன் அவரிடம், "அரசரும் திருமால் அம்சத்தினரேயாவர். எனவே அரசரைப் பாடு வீராக!" என வலியுறுத்திப் பாட வேண்டவே, கணி கண்ணர்,

**"ஆடவர்கள் எங்ஙன் அகன்றெழிவார் வெஃகாவும்**
**பாடகமும் ஊரகமும் பஞ்சரமா—நீடியமால்**
**நின்ருன் இருந்தான் கிடந்தான் இதுவன்றே**
**மன்ரூர் பொழிற்கச்சி மாண்பு"**

என்று கவியொன்று பாடினர்.

**மன்னன் சீற்றம்**

இப்பாடலைக் கேட்ட மன்னனுக்கு ஏமாற்றம் ஆயிற்று. அவன் சினம் பொங்கியவனுய் கணிகண்ண ரிடம், "நான் உம்மை என்னைக் குறித்துத் கவிபாடச் சொன்னதற்கு நீர் கச்சி நகர் சிறப்பைக் குறித்துக் கவிபாடியிருக்கிறீர். நீர் இனி இங்கு இருத்தல் கூடாது

உடனே வெளியேறிவிடும்'' எனக் கண்டிப்புடன் கட்டளையிட்டான்.

கணிகண்ணர் உடனே திருமழிசையாழ்வாரை அடைந்து அவரிடம், ''மன்னனுக்கும் தமக்கும் நடந்த உரையாடலைத் தெரிவிக்கிறார். மன்னன் தமக்கிட்டுள்ள கட்டளையை அறிவித்து, தாம் அவ்வூரை விட்டு வெளியேற அவரிடம் இசைவு கேட்டு நின்றார்.

இதைக் கேட்ட திருமழிசைப் பெருமான் ''அப்படியா செய்தி! நல்லது நானும் பெருமாளை எழுந்தருளச் செய்து உன்னுடன் வருகிறேன்'' எனக் கூறித் திருக்கோயில் சென்றார். அங்கு இறைவரைத் தொழுது, ''கணிகண்ணன் இங்கிருந்து போகிறான். எம் மணி வண்ணப் பெருமானே, நீயும் இங்கே கிடக்க வேண்டாம். புலமை கொண்ட நானும் போகின்றேன். நீயும் உனது பாம்பணையைச் சுருட்டிக கொண்டு புறப்படு'' என்று.

> **''கணிகண்ணன் போகின்றான்; காமருபூங்கச்சி**
> **மணிவண்ணா நீகிடக்க வேண்டா-துணிவுடைய**
> **செந்நாப் புலவனும் போகின்றேன், நீயுமுன்றன்**
> **பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்''**

என்ற பாடலைப் பாடினார். பக்தரின் வேண்டுதலுக்கு இசைபவரல்லவா இறைவர்! எனவே அவரும் திருவெஃகாவை விட்டு உடனெழுந்து வர மூவரும் அந்நகரை விட்டுப் புறப்பட்டுப் பக்கம்உள்ளதோர் ஊரில் தங்கியிருந்தனர். இவ்வாறு இவர்கள் மூவரும் வெஃகா நகரை விட்டு விலகவே, அந்நகரிலுள்ள பிற கோயில்களில் எழுந்தருளியுள்ள பெருமாள்களும் அங்கங்

கிருந்து விலகினர். மற்றுள்ள ஆலயங்களிலும் தெய்வ தெரிசனம் இல்லாது போயிற்று. எனவே அந்நகர் பொலிவிழந்து ஒளியின்றி இருளால் மூடப்பட்டது.

**மன்னன் தவறுணர்ந்து பணிதல்**

இவ்வாறு நகரம் நீளிருளில் மூழ்கியதைக் கண்ட அமைச்சர்களும் அரசனும் அஞ்சி நடுங்கினுர்கள். மன்னன் தன் தவற்ருல் நேர்ந்ததே இது என்பதை உணர்ந்து மிகவும் வருந்தினுன். அமைச்சர்கள் பின் தொடர அரசன், அம்மூவரும் தங்கியிருந்த இடத்தை விரைவாக நாடிச் சென்ருன். அங்கு அரசன் கணி கண்ணர் திருவடிகளில் வீழ்ந்து, தான் இழைத்த தவற்றினைப் பொறுத்தருள வேண்டுமென இரங்கி மன்ருடி வேண்டினுன். மற்றவர்களும் வணங்கிக் குறை பொறுக்க வேண்டினர். கணிகண்ணரும் திருமழிசை யாழ்வாரிடம் வேண்டிக் கொள்ள, அவர் அதை ஏற்று எம்பெருமானிடம், ''கணிகண்ணன் நகர்விட்டுப் போவதை நிறுத்தினுன். மணிவண்ணப் பெருமானே, நீயும் வெஃகாவில் வந்து கிடக்க வேண்டும். நானும் வேறு இடம் போவதை நிறுத்தினேன். நீயும் உன்றன் பாம் பணையில் படுத்துக் கொள்'' என வேண்டினுர்.

> **''கணிகண்ணன் போக்கொழிந்தான்; காமருபூங் கச்சி**
> **மணிவண்ணு நீகிடக்க வேண்டும்-துணிவுடைய**
> **செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன், நீயுமுன்றன்**
> **பைந்நாகப் பாய்படுத்துக் கொள்''**

எம்பெருமானும் ஆழ்வார் பெருமானின் வேண்டுதலுக்கு இசைந்து, அவருடனும் கணிகண்ணருடனும்

திருவெஃகாவை யடைந்து கண்வளரலானூர். இதன் பின்னர் காஞ்சி நகர் பழைய பொலிவையும் ஒளி யையும் பெற்றுத் திகழ்ந்தது. மன்னவன் பாகவதர் களின் தெய்வப் பேராற்றலே நன்கு தெரியலானுன். பின்னர் அவர் அவர்களேப் பணிந்து வாழ்த்தி அவர் களுக்குத் தொண்டுகள் செய்து வரலானுன்.

### வேதியர்களுக்கு அருள் கூர்தல்

சில நாட்கள் செல்லவும் ஆழ்வார்பெருமான் திருக் குடந்தை என்னும் கும்பகோணத்தில் அழகொளிரக் கிடக்கும் ஆதிமூலப் பெருமானேச் சேவிக்க எண்ணி அங்குப் பயணப்பட்டார். இவர் செல்லும் வழியில் புலியூர் என்ற கிராமத்தை அடைந்தார். அங்கு ஒரு வேதியர் வீட்டுத் திண்ணேயில் வீற்றிருந்து சற்று நேரம் ஒய்வெடுத்துக் கொண்டிருந்தார். அங்கு வேதம் ஓதிக்கொண்டிருந்த வேதியர்கள், திருமழிசைப் பிரானே இழிந்த சாதியார் எனக் கருதி, அவர் காதுகளில் வேத ஒலிபடக் கூடாது என்று ஓதுதலே நிறுத்தினுர்கள்.

இதை உணர்ந்து கொண்ட திருமழிசைப்பிரான், அங்கிருந்தும் எழுந்து, சற்றுத் தொலேவில் மற்ருெரு வீட்டின் பக்கம் சென்றமர்ந்தார். இவர் அகன்றதும் வேதியர்கள் திரும்பவும் வேதம் ஓதத் தொடங் கினுர்கள். ஆனுல் அவர்களுக்கு ஓதிவிட்ட இடம் தெரியாது குழம்பினுர்கள்.

வேதியர் நிலேகண்ட ஆழ்வார் கருநெல்லே நகம் கொண்டு பிளந்து காட்ட, பின்னர் அவர்களுக்கு விடு பட்ட இடம் தெரியவந்தது. அவர்கள் தங்கள் தவற்றை உணர்ந்து ஆழ்வாரை வணங்கித் தாங்கள்

செய்த பிழையைப் பொறுத்துக் கொள்ள வேண்டி ளுர்கள். ஆழ்வார் பெருமானும் அவ்வாறே ஆகி அவர்களிடம் உள்ளம் மகிழ்ந்து நல்லுரைகள் பேசி விடைபெற்றுச் சென்ருர்.

இந்நாட்களில் மற்ருேர் அதிசயம் அங்கு நிகழ்ந்தது. இவ்வூர் ஆலயத்தில் கோயில் கொண்ட எம்பெருமான், திருமழிசைப்பிரான் எங்கெங்குத் திரும்புகின்ருரோ அங்கங்கே தாமும் திரும்பலாஞர். இவ்வதிசயத்தை அர்ச்சகர் வழியாக அறிந்த அவ்வூர் மக்கள், அங்கு யாகம் செய்து கொண் டிருந்த பெரும்புலியூர் அடிகளிடம் போய் அறிவிக் கிருர்கள். இதைக் கேட்ட தீட்சிதராகிய பெரும் புலியூர் அடிகள் பக்திசாரராகிய இவர் இருக்குமிடம் வந்து இவரை வணங்கி, கண்பெற்ற பயன், பெற்ருே மெனக் களிபேருவகை கொள்கிருர். பின்னர் தீட்சிதர் அவரை யாகசாலேக்கு எழுந்தருள வைத்து அங்கு உயரிய பீடம் ஒன்றில் அமர வைக்கிருர். யாகத்தில் செய்யும் அக்கிர பூசையை ஆழ்வார் பெருமானுக்குச் செய்கிருர். பொருமை கொண்ட வேள்விச் சடங் கர்கள் இழிவாக தூற்றத் தொடங்கினர். இதைக் கேட்டுப் பொறுக்க இயலாத யாகத்தலேவர் ஆழ்வார் பெருமானிடம்'', இவர்கள் இவ்வாறு பேச என்னுல் பொறுக்க இயலவில்லே' என மன வருத்தத்துடன் கூறுகிருர், ஆழ்வார் பெருமானும் இச்சடங்கர்களுக்கு நல்லறிவு நல்க எண்ணுகிருர்,

> ‘அக்கரங்கள் அக்கரங்கள் என்றுமாவ தென்கொலோ
> இக்குறும்பை நீக்கியென்னே ஈசனுக்க வல்லேயேல்
> சக்கரங்கொள் கையனே சடங்கர்வா யடங்கிட
> உட்கிடந்த வண்ணமே புறமபொசிந்து காட்டிடே’’

என்று எம்பெருமானிடம் அவர் வேண்டிக் கொண் டார். தம்மை வணங்குபவர்களுக்கு அருள் செய்யும் பெருங்கருணைக் கடலல்லவா இறைவன்! திருப்பாற் கடலில் அவர் பள்ளி கொண்டுள்ள காட்சியை ஆழ் வார் திருமேனியில் தோற்றுவித்துக் காட்டினுர். இது கண்ட சடங்கர்கள் ஆழ்வாரைக் குறித்துக் கொண் டுள்ள கீழான எண்ணத்தை மாற்றி எல்லையற்ற அவரது பெருமையை உணர்ந்து அவர்தம் திருவடி களில் வீழ்ந்து வணங்கினர். தம் பிழையைப் பொறுத்து மன்னித்தருளவேண்டினர். திருமழிசைப் பெருமானும் அவர்கள் செய்ததை மறந்தவராய் அவர்களுக்கு ஞானமொழிகள் போதித்தார், பின்னர் அங்கிருந்தும் குடந்தைக்குப் பயணப் பட்டார்,

கும்பகோணம் வந்து சேர்ந்த திருமழிசைப் பெருமான் அங்கு, சயனக்கோலத்தில் வீற்றிருக்கும் ஆராவமுதனைச் சேவித்து இன்புற்ருர், எம்பெருமான் மீது தாம் பாடிய பாசுரங்களைப் பாடிப் பரவினுர். எம் பெருமான் மீது இவர் கொண்டுள்ள உறவை,

**''இன்று ஆக, நாளையே ஆக, இனிச் சிறிது**
**நின்று ஆக, நின் அருள் என்பாலதே - நன்ருக**
**நான்உன்னை அன்றிஇலேன் கண்டாய் நாரணனே!**
**நீ என்னை அன்றி இலை''**

என்ற பாசுரமும் இது போன்ற பிற பாசுரங்களும் தெரிவிக்கும்.

இவரது பாசுரங்கள் ஞானத்தை நல்கித் தத்து வங்களை உணர்த்துவனவாகும். இறைவன்பால் ஆழ மான பக்தியை உண்டாக்கி, அவனேடு ஈடுபடுத்தும் ஆற்றல் இப்பாசுரங்களுக்கு உண்டு. எளிமையும்

இனிமையும் கொண்டு திகழ்வன. இவர் பாடியவை நான்காம் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் என்னும் இரு திருநூற்களில் நான்முகன் திருவந்தாதி தொண்ணூறு பாசுரங்களும் திருச்சந்த விருத்தம் நூற்றிருபது பாசுரங்களும் கொண்டவை, நான்காம் திருவந்தாதியை ஞானக்களஞ்சியம் எனக்கூறலாம். திருச்சந்த விருத்தம் பெருமித நடைகொண்டு இன்சுவை யூறும் தேனமுதத் திருப்பாசுரங்கள்.

**''தன்னுளே திரைத்துஎழும் தரங்க வெண்தடங்கடல்**
**தன்னுளே திரைத்துஎழுந்து அடங்குகின்ற தன்மைபோல்**
**நின்னுளே பிறந்துஇறந்து நிற்பவும் திரிபவும்**
**நின்னுளே அடங்குகின்ற நீர்மைநின்கண் நின்றதே"**

**அங்கம் ஆறும் வேதம்நான்கும் ஆகிநின்று அவற்றுளே**
**தங்குகின்ற தன்மையாய்! தடங்கடற் பணத்தலை**
**செங்கண் நாகணைக் கிடந்தசெல்வம் மல்குசீரினய்**
**சங்கவண்ணம் அன்னமேனி சார்ங்கபாணி அல்லையே?"**

இவைபோன்ற திருச்சந்த விருத்தப் பாசுரங்கள் ஆழ்வார் பெருமானின் ஆராவமுதன் பக்திப் பெருக்கை எடுத்துக் காட்டுவனவாம்.

**பாடிய திருத்தலங்கள்**

திருமழிசையாழ்வார் பெருமானல், திருவரங்கம், அன்பில், திருப்பேர் நகர், கும்பகோணம், கவித்தலம், திருக்குறுங்குடி, திருக்கோட்டியூர், திருக்கூடல், திருஊரகம், திருப்பாடகம், திருவெஃகா, திருவெவ்வுளூர், திருவேங்கடம், திருப்பாற்கடல்,துவாரகை, பரமபதம் முதலிய திருத்தலங்கள் பாடப்பட்டுள்ளன.

திருக்குடந்தையில் நீண்ட காலம் வீற்றிருந்த இவ்வாழ்வார் பெருமான், தம் பாசுரங்கள் மூலம் மக்களின் அகஇருளை நீக்கி அவர்களிடம் மெய்ஞ்ஞான ஒளியை ஏற்றியருளினுர். இங்கேயே இவர் எம் பெருமான் திருவடிநிழலை அடைந்தார்.

## வாழ்த்துப் பாடல்

அன்புடன் அந்தாதி தொண்ணூற்ருே டாறுரைத்தான்
வாழியே
அழகாகும் திருமழிசை அமர்ந்தபிரான் வாழியே
இன்பமிகு தையில்மகத் திங்குதித்தான் வாழியே
எழிற்சந்த விருத்தம்நூற் றிருபதீந்தான் வாழியே
முன்புகத்தில் வந்துதித்த முனிவர்கோன் வாழியே
முழுப்பொன்னிப் பெருக்கெதிர்செல் முதிர்
கவியோன் வாழியே
நன்புவி நாலாயிரத்தெழு நூறிருந்தான் வாழியே
நங்கள்பத்தி சாரனிரு நற்பதங்கள் வாழியே.



# 5. நம்மாழ்வார்

தொன்று தொட்டுச் சிறப்புடைய திருநாடு பாண்டி நாடு. இது, முத்து வளத்தாலும் முத்தமிழ்ப் பெருக்காலும் புகழ் மிக்கது. பல தெய்வத் திருப்பதி களைத் தன்னகத்தே கொண்டு, தரணியெலாம் போற்றும் பேறுடையது.

இந்நாட்டில் வளம் பெருக்கும் ஆறுகளில் ஒன்று தாமிரபரணி என்னும் பொருநையாறு, இதன் கரை யில் அமைந்துள்ளது ஆழ்வார் திருநகரி என்னும் அழகுத் திருப்பதி. இதைத் திருக்குருகூர் என்றும் அழைப்பர். இங்கு மரபுவழித் தொடர்ந்து திருமால் பெருமானுக்குப் பக்தியுடன் தொண்டு செய்யும் வேளாளர் குடும்பத்தில் தோன்றியவர் பொற்காரி யார் என்பவர். இவரது புதல்வர் காரியார் என்னும் பெயரினர். பொற்காரியார் தம் புதல்வருக்குத் திருமணம் செய்விக்க எண்ணினர். தக்க மணப் பெண்ணைத் தேடிக் கொண்டிருந்தார்.

மலையமா நாட்டில் திருவண்பரிசாரம் என்னும் ஊரில் திருவாழ்மார்பர் என்னும் அருங்குணங்கள் அனைத்தும் அமைந்த ஒருவர் இருந்தார். இவர் முகுந்தப் பெருமானிடம் மிகுந்த ஈடுபாடு கொண்ட

வர். இவருக்கு உடைய நங்கையார் என்னும் ஒரு புதல்வி இருந்தார். இவர் உயர்ந்த பண்புகளின் இருப்பிடமாய்த் திகழ்ந்தவர். இம்மங்கையையே தம் புதல்வருக்கு ஏற்ற மணப்பெண் எனப் பொற்காரியார் தேர்ந்தெடுத்தார். பின்னர் நல்ல தோர் நாளில் காரியாருக்கும் உடைய நங்கையாருக் கும் அவ்வூரில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

திருமணத்தின் பின்னர் மணமக்கள் இருவரும் திருக்குருகூருக்கு வந்தனர். அங்குத் தம்பதியர் மனம் ஒன்றி மகிழ்ச்சியோடு இல்லற வாழ்வில் நாட்களை கழித்து வருகையில் மாமனர் திருவாழ்மார்பரிட மிருந்து திருவண்பரிசாரம் வந்துசேர அழைப்பு வந்தது. இவ்வழைப்பை ஏற்றுக் காரியார் தம் துணைவியாருடன் திருவண்பரிசாரம் வந்து சிறிது காலம் தங்கியிருந்தார்.

பின்னர் அங்கிருந்து காரியார் தம் மனைவியுடன் ஊருக்குத் திரும்பி வருகையில், 'திருக்குறுங்குடி' என்னும் திருத்தலம் வந்தார். அங்கு எழுந்தருளியுள்ள நம்பிப் பெருமானை அவர்கள் வழிப்பட்டு, "எம் பெருமானே, எங்களுக்கு ஒரு குழந்தைப் பேற்றைத் தந்தருள வேண்டும்" என வேண்டிக் கொண்டனர். பெருமானும் இவர்கள் பக்திக் கனிவுக்கு அருள் கூர்ந்தார்.

அந்த அருட்பயனல் உடைய நங்கையார் கருப்பவதியானர். இவரது திருவயிற்றினின்றும் தெய்வ அம்சமும், கௌஸ்துபத்தின் அம்சமும், சேனைமுதலியின் அம்சமுமாக ஒரு குழந்தை வைகாசித்

திங்கள் வெள்ளிக்கிழமை வளர்பிறையில் விசாக நட்சத்திரத்தில் அவதரித்தது.

**அதிசயக் குழந்தை**

இக்குழந்தை அவதரித்ததும் இதனிடமிருந்து அழுகையோ, பாலுண்ணும் வேட்கையோ எழவில்லை. எனினும் இக்குழந்தையிடம் சோர்வோ, தளர்ச்சியோ இல்லாது இது பொலிவோடு ஒளிர்ந்தது. பெருமான் அருளால் பிறந்த திருக்குழந்தையானதால் பெற்றோரும் பிள்ளையின் நிலை கண்டு கவலை கொள்ளாது அனைத்துக்கும் எம்பெருமானே பொறுப்பு என இருந்தனர்.

பன்னிரு நாட்கள் கழிந்தன. பெற்றோர் திருநகரியிலுள்ள திருக்கோயிலுக்குக் குழந்தையை எடுத்துச் சென்றனர். இறைவன் திருமுன்னிலையில் குழந்தைக்குப் பெயர் சூட்ட எண்ணினர். ஏனைய குழந்தைகளின் நடைமுறைக்கு இக்குழவி மாறாக இருந்ததால் இதற்கு 'மாறன்' என்னும் திருநாமம் வைத்தனர். பின்னர் அருகே நின்ற புளியமரத்தின் அடியில் பொன்னாற் செய்த வண்ணச் சிறு தொட்டிலில் இக்குழந்தையைக் கிடத்தி வளர்த்தி வரலாயினர். இத்திருக் குழந்தை அவதரிக்கும் முன்னரே, இறைவருக்குத் தொண்டு செய்தலையே தனது பணியாகக் கொண்ட திருவனந்தாழ்வான் இதன் மீது வெயில் மழை விழாதிருக்க இவ்வாறு ஒரு புளியமரமாகத் தோன்றி வளர்ந்திருந்தார்.

**பெயர்ச் சிறப்புகள்**

இவர் கருவிலேயே ஞானத் திருவோடு பிறந்தவல்லவா! எனவே அஞ்ஞானத்தில் ஆழ்த்தி, அழுதல்,

அரற்றுதல் செய்யத் தூண்டும் 'சடம்' என்னும் வாயு இவரை நெருங்கித் தொடவர, இதை அவர் தம் சங்கார ஆற்றலால் ஓட்டி ஒழித்தார். இதனுல் இவருக்குச் சடகோபர் என்னும் திருப்பெயரும் வழங்கலாயிற்று. மேலும் இவர் அனைவரும் கொண் டாடும் படியாக எம்பெருமானுல் 'நம் ஆழ்வார்' என்று உவந்தேற்றுக் கொண்டதால் ஏனைய ஆழ்வார் கள் அனைவரிலும் உயர்வுற்ற நிலையில், 'நம்மாழ்வார்' என்ற திருநாமத்தையும் பெற்ருர். இரகுநாதப் பெருமான் வழங்கிய மகிழமலர் மாலையை அணிந்த தால் 'வகுளாபரணர்' என்றும் தமது ஞான அமு தொழுகும் பிரபந்தங்களில் வெளியிட்ட தத்துவங்கள் பிற சமயத்தினரின் செருக்கை அடக்கியதால் பராங்குசர் என்றும் இவர் அழைக்கப்பட்டார். இன்னும் குருகைப்பிரான், திருக்குருகூர் நம்பி, அருள்மாறன், தென்னரங்கன் பொன்னடி, திருநாவீ றுடைய பிரான் என்ற திருநாமங்களும் இவருக்குண்டு.

பதினுறு வயது வரையிலும் இவர் கண்விழியாதி ருந்தார். யாரோடும் உரையாடுவதில்லை. இது கண்ட பெற்ருேர்கள், "தம் புதல்வர் ஏன் இவ்வாறு இருக் கிருர்? கண் விழித்துப் பார்க்காத காரணம் என்ன?" என எண்ணிக் கவலை கொண்டனர். 'தம்மைப்போல் ஒருவரை இவர் காணுததினுல் இவ்வாறு இருக்கின்ருர் போலும்!' எனத் தம்முள் எண்ணி மனம் தேறு கின்றனர்.

### இறைவன் அருள் பாலித்தல்

இக்காலத்தில் இறைவன் தூண்டுதலால் சேனை முதலியார் திருக்குருகூருக்கு வந்து நம்மாழ்வாருக்குத்

தத்துவப் பொருள்களையெல்லாம் உபதேசித்தருளி ஞர். மந்திரங்கள் அனைத்தையும் உணரப் பெற்று, ஞானமுத்திரையும் கொண்டு, புளிநிழலில் அமர்ந்து, எம்பெருமானைச் சிந்தையில் கொண்ட இவர், தியானத்திலேயே மூழ்கியிருந்தார்.

**மதுரகவியாழ்வார் வணங்கிப் பணிதல்**

இவ்வாறு இவர் தியானத்தில் இருக்கும் காலத்தில், பாண்டிய நாட்டில் திருக்கோளூர் என்னும் திருப்பதியில் தோன்றிய மதுரகவியார் திருத்தலங்கள் சென்று தெரிசனம் செய்து கொண்டு வருகிருர். இவர் அயோத்தியிலிருந்த காலத்தில் நம்மாழ்வாரை பற்றிக் கேள்விப் படுகிருர். தென்திசையிலிருந்து வீசிய ஒளியைப் பார்த்து வியப்புற்று இவ்வொளியைத் தெரிசிக்கச் சிந்தையில் வேட்கை கொண்டவராய்ப் பயணம்மேற்கொள்கிருர். கோதாவரி, திருவேங்கடம், தொண்டைநாடு, திருவரங்கம் முதலிய இடங்களைக் கடந்து திருக்குருகூருக்கு வருகிருர். அங்குக் கண்மூடி மௌனமாக வீற்றிருக்கும் நம்மாழ்வாரை மதுரகவி யார் உள்ளம் சோதிக்க எண்ணுகிறது. அவர் நம்மாழ்வார் முன்னே ஒரு சிறு கல்லை எடுத்துப் போட வும், அவ்வொலியைக் கேட்டு இவர் கண்விழித்துப் பார்க்கிருர். இதைக் கண்ட மதுரகவியார் இவரிடம் தத்துவத்தை அறியும் கேள்வி ஒன்றைக் கேட்கிருர், இதற்குத் தெளிவும் விளக்கமும் ஆழமும் கொண்ட பதிலையளிக்கிருர் சடகோபர்.

மதுரகவியார் இதைக் கேட்டு வியப்பும் களிப்பும் கொண்டு மெய்சிலிர்த்தவராய் நம்மாழ்வார் திருவடிகளின் முன் வீழ்ந்து வணங்கினர். தாம் திருஞானம் பெற்றுய்ய இவரே தக்கவர் எனத் தேர்ந்தார் மதுர

கவியார், எனவே இவர் நம்மாழ்வாரிடம் தமக்குத் தத்துவ ஞானங்களை விளக்கியருள வேண்டும் எனக் கைகூப்பி வேண்டுகிறார்.

**திருக்காட்சியில்**
**உளம் உருகுதல்**

நம்மாழ்வாருக்குத் தம் திருக்காட்சியை அளிக்க எம்பெருமான் திருவுளம் கொண்டார். எனவே அவர் பிராட்டியாரோடு கருடப் பெருமான் மீது எழுந்தருளி இவர்முன் தோன்றினார். ஞானத் திருவழகு மிக்க இக் காட்சியைக் கண்டு நம்மாழ்வார் ஆனந்தப் பெருங் கடலில் அமிழ்ந்தார். ஊனுருகி, உளமுருகி, உயிருருகிச் சிலிர்த்தார். பெருமாள்கள் திருக்குணங்களில் திளைத்து அனுபவித்து அளவில்லாப் பேரானந்தம் அடைந்தார். இத்திருக்காட்சி, திருக்குண அனுபவ ஆர்வம் அடங்காது மேலும் மேலும் இவரிடம் பெருகி எழுந்தது. இதை அவர் நறை ஒழுக்கும் செந்தமிழ்ச் செல்வமென, தித்திக்கும் ஞான அமுதமென, பாசுரங் களாக ஆக்கினார்.

**அருளிச் செயல்கள்**

இருக்கு, யசுர், அதர்வணம் என்ற மறைகள் மூன்றின் சாரமாக நம்மாழ்வார் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்பவை அமைந் துள்ளனவாகவும், வேதங்களில் சிறப்பு மிக்கதும், இறைவன் அம்சமுமான சாம வேதம் இவரது திருவாய் மொழியாக அமைந்துள்ளதாகவும் கருதப்படுகின்றன. ஏழு பாசுரங்களைக் கொண்டது திருவாசிரியம். எண்பத் தேழு பாசுரங்களைக் கொண்டது பெரிய திருவந்தாதி. நூறு பாசுரங்களைக் கொண்டது திருவிருத்தம்,

திருவாய் மொழியில் ஆயிரத்து நூறு பாசுரங்கள் அடக்கம். இத்திரு நூற்களை இவர் மதுரகவியாழ் வாருக்கு அருள அவர் பட்டோலையில் அலங்கரித்து, உலகமக்கள் உய்வுபெற எங்கும் பரப்பியருளினர்.

வைணவப் பெரியார்கள் இவரைத் தலைவராகக் கூறுவர். இவரை அவயவி (உறுப்பி) யாகவும் ஏனைய ஆழ்வார்களை இவருக்கு அவயவங்கள் (உறுப்புக்கள்) ஆகவும் கொள்வர்.

**பாடிய திருத்தலங்கள்**

திருவரங்கம், திருப்பேர்நகர், கும்பகோணம், திருவிண்ணகர், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ் சோலைமலை, திருமோகூர், திருக்குருகூர், ஆழ்வார் திரு நகரி, ஸ்ரீவரமங்கை, திருப்புளிங்குடி, திருப்பேரை, ஸ்ரீ வைகுந்தம், வரகுணமங்கை, பெருங்குளம், திருக் குறுங்குடி, திருக்கோவலூர், திருவனந்தபுரம், திருவண் பரிசாரம், திருக்காட்கரை, திருமூழிக்களம், திருப்புலி யூர், திருச்செங்குன்றூர், திருநாவாய், திருவல்லவாழ், திருவண் வண்டூர், திருவாட்டாறு, திருக்கடித்தானம், திருவாறன்விளை, திருவேங்கடம், திருவயோத்தி, துவாரகை, வடமதுரை, திருப்பாற்கடல், பரமபதம் முதலிய திருத்தலங்களை இவர் பாடியுள்ளார்.

நம்மாழ்வார் இயற்கையில் இறைவனைக் கண்ட பேரருளாளர். உலகில் கண்ட அனைத்தையும் அவர் இறைவன் அம்சமாகவே எண்ணி அனுபவித்தார். தமிழோடு இசையாகி, அவ்விசையிலே இறையனு பவத்தைப் பெற்ற திருச்செல்வர். பாசுரங்களைப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட இசையாய்ப் பாடியவர். இறையுணர்வும் பேரன்பும் பொங்கும்

இவரது பாசுரங்கள் கவிச்சுவையைப் பிழிந்து தருவன வாகும்.

இவர் எம்பெருமானைத் தவிர வேறு எதிலும் நாட்டம் செலுத்தாது முப்பத்தைந்து திருநட்சத் திரம் காலம் வாழ்ந்து இறைவன் திருவடி நிழலடைந் தார்.

## வாழ்த்துப் பாடல்

ஆனதிரு விருத்தம்நூறும் அருளினான் வாழியே
ஆசிரியம் ஏழுபாட்டும் அளித்தபிரான் வாழியே
ஈனமற வந்தாதி என்பதேழீந்தான் வாழியே
இலகுதிரு வாய்மொழி யாயிரத்தொரு நூற்றிரண் டுரைத்தான் வாழியே
வானணியும் மாமடக் குருகைமன்னன் வாழியே
வைகாசி விசாகத்தில் வந்துதித்தான் வாழியே
சேனையர்கோன் அவதாரம் செய்தவள்ளல் வாழியே
திருக்குருகைச் சடகோபன் திருவடிகள் வாழியே

மேதினியில் வைகாசி விசாகத்தோன் வாழியே
வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்தான் வாழியே
ஆதிகுருவாய் அம்புவியில் அவதரித்தான் வாழியே
அனவரதம் சேனையர்கோன் அடிதொழுவோன் வாழியே
நாதனுக்கு நாலாயிரம் உரைத்தான் வாழியே
நன்மதுர கவிவணங்கும் நாவீறன் வாழியே!
மாதவன் பொற்பாதுகையாய் வளர்ந்தருள்வோன் வாழியே!
மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே.

# 6. குலசேகராழ்வார்

மலைவளம் மிக்கது சேரநாடு. யானைப் பெருக்கம் இந்நாட்டுக்கே உரிய செல்வம். இங்கு எங்கு நோக்கினும் பச்சைப் பசேலென்ற காட்சி கண்ணுக்கு விருந்தாய் அமையும். மேலும் இது பல திருத்தலங்களைக்கொண்டு சிறப்போங்கி நிற்பது. இந்நாட்டை ஆண்டு வந்த சேரமன்னர்கள் இமயம்வரை சென்று தங்கள் ஆற்றலைக் காட்டியவர்கள். இம்மன்னர் மரபில் தோன்றியவர் திடவிரதன் என்பவர். இவர் கொல்லி நகரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்தார். இவர் ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியில் திளைத்து வாழ்ந்து வந்தனர்.

மன்னர் திடவிரதன் வாழ்வில் ஒரு குறை இருந்தது. அவருக்கு இல்லற வாழ்வில் மகப்பேறு வாய்க்காத குறைதான் அது. தான் உய்வதற்கும், தன் காலத்திற்குப் பின்னர் நாட்டு மக்களைக் காத்துச் செங்கோல் ஓச்சவும் ஒரு புதல்வன் பிறக்கவில்லையே என்ற கவலை இவரைப் பெரிதும் வாட்டுகிறது. குழந்தைப் பேற்றுக்காக இவர் நாளும் இறைவனை வணங்கி வேண்டுகிறார். உயரிய வேள்வி ஒன்றையும் நிறைவாகச் செய்து முடித்தார்.

## குழந்தைப் பேறு

இறைவன் இன்னருள் சுரந்ததுபோல் இம்மன்னர் பட்டத்தரசி கருப்பவதியாகிருள். கொல்லி நகரில் இவ்வரசியார் கௌஸ்துப இரத்தினத்தின் அம்சமாய் மாசித் திங்கள் புனர்வசு நட்சத்திரத்தில் ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தார்.

இதைக் கேள்வியுற்ற மன்னர் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினுர். மக்களின் களிப்பு அளவு கடந்திருந்தது. குழந்தை பிறந்த பூரிப்பில் மன்னன் நான்மறையாளருக்கும் மற்றையோருக்கும் செல்வக் குவியலை அள்ளி வழங்கினுர். குழந்தையைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தார். செய்யவேண்டிய மங்கலச் சடங்குகள் அனைத்தையும் சிறப்புறச் செய்தார். குழந்தையின் அரிய தன்மையைக் கண்டு, அது தன் குலத்துக்கே பெருமையைத் தரும் என்பதை உணர்ந்து அதற்குக் குலசேகரன் என்னும் திருப்பெயரையும் சூட்டினுர்.

## கல்வியும் கலைப்பயிற்சியும்

உரிய பருவத்தில் குலசேகரனுக்குத் தந்தையால் தக்கவர்களைக் கொண்டு கல்விப் பயிற்சியும் கலைப் பயிற்சியும் அளிக்கப் பெற்றன. இவர் தென்மொழியிலும் வடமொழியிலும் சிறந்த தேர்ச்சி பெற்ருர். இவர் மறைகளை ஐயமறக் கற்றுத் தெள்ளிய ஞானம் பெற்றுத் திகழ்ந்தார். மன்னருக்கு வேண்டிய போர் முறைப் பயிற்சிகளும் இவருக்கு அளிக்கப் பெற்றன. நீதி நெறி முறைகளிலும் இவர் நிகரற்று விளங்கினுர். தன் புதல்வருக்கு நான்மறைக் கல்வியும் ஞானத்

திருவும் பிற கலைப்பயிற்சிகளும் வருந்தாமல் திருந்த வரக்கண்டு களிபேருவகை கொள்கிறார் மன்னர். மகனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி அதற்குரிய பொறுப்புகளையும் அவரிடம் ஒப்புவிக்கிறார்.

**வெற்றிமாலை சூடுதல்**

இளவரசர் குலசேகரர் தமது பகைவர்களை வெல்ல எண்ணுகிறார். தமது படைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு போருக்குப் புறப்பட்ட அவர், சோழ, பாண்டிய மன்னர்களை வென்று வெற்றிமாலை சூடுகிறார். அவர்கள் நாடுகள் இவர் நாட்டோடு சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. எனவே சேர, சோழ, பாண்டிய நாடு இவரது தலைமைக்குட்பட்டதாயின. போர்த் திறனும் போற்றும் ஆற்றலாலும் இவர் கொல்லி காவலன், கூடல்நாயகன், கோழிக்கோன் என்ற பட்டங்களைப் பெற்றார். தம் அருமகனின் திறன் கண்டு பெருமகிழ்வுற்ற மன்னர் திடவிரதன், அவ்வளவு காலம் தாம் ஆற்றிவந்த ஆட்சிப் பொறுப்பைக் குலசேகரரிடம் ஒப்புவிக்க முடிவு செய்கிறார். எனவே நல்லதோர் நாளில், நாடெல்லாம் கொண்டாடும் விதத்தில் தம் மைந்தருக்கு அவரால் முடிசூட்டு விழா நடத்தப்படுகிறது. பின்னர் தம் உய்வின் பொருட்டு மன்னர் திடவிரதன் நாடு துறந்து காடு சேர்ந்து தவ நிலையை மேற்கொள்ளலானார்.

**மைந்தர் மனக் கலக்கம்**

தந்தை துறவுநிலை மேற்கொண்டு தம்மை விட்டுப் பிரிந்து சென்றது, குலசேகரரைக் கலங்க வைத்தது. தந்தையின் மீதுள்ள பாசம் மைந்தரைத் தவிக்க

வைத்தபோது, அருகேயிருந்த அமைச்சர்கள் அவருக்கு ஆறுதல் சொல்லித் தேற்றிஞர்கள்.

காலப் போக்கில் மனத்துயர் ஆறிய குலசேகரர் பின்னர் ஆட்சியில் கருத்தூன்றலானுர். குடிமக்களுக்கு எவ்விதக் குறையும் நேராத நிலேயில் இவரது ஆட்சி அமைந்தது. நாட்டில் அன்பும் அறமும் பெருகின; நீதியும் நேர்மையும் நிலேத்தன.

### திருமண வாழ்வு

தக்க காலத்தில் குலசேகரருக்குத் திருமணம் சிறப்புடன் நடைபெற்றது. இல்லற வாழ்வில் இவருக்கு 'இளே' என்னும் புதல்வி ஒருத்தியும் 'திடவிரதன்' என்ற அவர் தந்தையின் பெயர் வைக்கப் பெற்ற புதல்வன் ஒருவனும் மக்கள் செல்வங்களாகத் தோன்றினர். கவலேயும் துயரமும் இல்லாத நிலேயில் வாழ்வை மிக்க மகிழ்ச்சியோடு நடத்திக்கொண்டிருந் தார் குலசேகரர்.

### தெய்வ நினேவில் சிந்தனே

இக்காலத்தில் இவர் தெய்வச் சிந்தனேகளில் ஈடு படலானுர். நற்பேறு அளிக்கும் சமயம் எதுவென அறிய இவரது உள்ளம் வேட்கை கொண்டது. இதற் காகப் பண்டிதர்கள் பலருடன் தத்துவவிசாரணேகளில் ஈடுபடுகிருர். எம்பெருமான் திருவருள் இவருக்கிருந்த தால் திருமாலே வழிபடத் தக்க தெய்வம் என்பது இவருக்குத் தெளிவாயிற்று. அறிய வேண்டும் தத்துவங்கள் அனேத்தும் அப்பெருமான் திருவருளால் இவருக்கு வாய்த்தன.

திருமாலிடம் நீங்காத பற்றுக்கொண்ட குல சேகரப் பெருமான், அவரது பேரருளை எண்ணி யெண்ணி இதயம் கசிவார். எம்பெருமானின் இராமா வதாரம் இவரைப் பெரிதும் ஆட்கொண்டது. எனவே இவர் ஒரு பெரியாரிடம் நாள்தோறும் இராமா வதாரக் கதையைக் கேட்டுக் கொண்டு வந்தார். ஒரு நாள் ஆரணிய காண்டத்திலுள்ள கதையில் பின்வரும் நிகழ்ச்சிகளை அப்பெரியவர் சொல்லிக் கொண்டிருந் தார். ''மூக்கு அறுபட்ட சூர்ப்பனகை கரனிடம் போய்ச் சொல்ல அவ்வரக்கன் கடுஞ்சினம் கொண்டு போர் முரசங்கள் முழங்கத் தன் பெரும்படைகளோடு கடல்பொங்கி எழுந்து வந்ததுபோல் இராம இலக்கு மணர்களை அழிக்க வருகிறார்கள். இராமபிரான் பர்ண சாலையில் சீதாபிராட்டியாருக்குக் காவலாக இளைய பெருமாளை அமர்த்திவிட்டுத் தாம் மட்டும் தனியாக அவ்வரக்கர்களோடு போர் செய்ய வந்து நிற்கிறார்'' என்று சொன்னதும் கதையில் தம்மை மறந்து மூழ்கி யிருந்த குலசேகரர் அந்நிகழ்ச்சி அப்போதுதான் நடப்பதாக எண்ணி, ''இந்நேரத்தில் எம்பெரு மானுக்கு என்னாலான உதவியை நான் செய்தேயாக வேண்டும்'' என்று முடிவு செய்கிறார். உடனே தம் படைவீரர்களைப் போருக்குரிய ஆயுதங்களோடு முன்னே அனுப்பி வைத்து, தாமும் தேரில் ஏறி இராமபிரானுக்கு உதவும் எண்ணத்தை மேற்கொள் கிறார்.

மன்னரது இச்செயலைக் கண்டு அங்கிருந்தோர் அனைவரும் திடுக்கிட்டுப் போயினர். என்ன செய்வ தெனத் தெரியாது திகைத்தனர். இந்நேரம் கதை சொல்லும் அப்பெரியார் நிலைமையை யுணர்ந்து மிகச் சாதுரியமாக ''சக்கரவர்த்தித் திருமகன் தாம் ஒருவ

ராக நின்று போர் செய்து கொடிய பகைவர்கள் அனை வரையும் வென்று அழித்தொழித்தார். பின்னர் இராமபிரான் பர்ண சாலைக்கு வந்து இளையவருடனும் சீதாபிராட்டியுடனும் மகிழ்ச்சியோடு உரையாடிக் கொண்டிருந்தார்'' என்று சொல்லி முடித்தார்.

இந்நிகழ்ச்சிகளைக் கேட்ட குலசேகரப் பெருமான், மனநிலை தெளிந்து, இன்ப உணர்வில் திளைத்தார். தம் படைகளைத் திருப்பி அவைகளுக்குரிய இடங்களுக்குச் செல்ல ஆணை வழங்கினார். தாமும் செல்ல முனைந்ததை நிறுத்திக் கொண்டார். இந்த அளவுக்கு இராம கதையில் அவருக்கு ஈடுபாடு இருந்தது.

### அமைச்சர்கள் சூழ்ச்சி

மன்னரின் வைணவப் பக்திப் பெருக்கால் அரண் மனையில் வைணவர்களின் போக்குவரவு மிகுந்தி ருந்தது. அவர்கள் அரண்மனையிலும், ஆலோசனை மண்டபத்திலும் பிற அந்தரங்க இடங்களிலும் எவ் விதக் கட்டுப்பாடுமின்றிச் சுற்றித் திரிந்து வந்தார்கள். மன்னரிடமும் இவர்களுக்கு அளவுகடந்த செல்வாக் கிருந்தது. இதையெல்லாம் அமைச்சர்களால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. ஆட்சிமுறைக்கு இந்நிலை இடையூறுகுமோ என எண்ணினர். அவர்கள், வைணவர்கள் மீது வெறுப்பும் பொறாமையும் கொண் டனர். எந்தவகையில் அவர்களது அரண்மனைத் தொடர்பையும் அரசர் பிடிப்பையும் அறுக்கலாம் எனச் சிந்திக்கலாயினர். இவர்களது இச்சிந்தனையில் திட்டம் ஒன்று உருவாயிற்று.

குலசேகரர் பூசை செய்து வரும் பெருமானுக்கு அணியும் நவமணிமாலை ஒன்றை அமைச்சர்கள்

எடுத்து மறைத்து வைக்கின்றனர். மாலை களவுபோன செய்தி மன்னருக்கு எட்டுகிறது. அவர் இது குறித்து வினவிய போது அமைச்சர்கள் அவரிடம், "இங்கு வெளியிலிருந்து யாரும் வருவதில்லை. வைணவர்களே இங்கு எங்கும் சுற்றி வருகிறார்கள். எனவே அவர்களே இதை எடுத்திருக்க வேண்டும்" எனக் கூறுகிறார்கள்.

இச் சொற்களைக் கேட்டு மன்னர் மனம் நொந்து போகிறார். வைணவர்களின் உயரிய இயல்பை அவர் நன்கு அறிந்தவரல்லவா! அத்தகையோர்மீது அடாத பழி சுமத்தியதை அவரால் தாங்கிக் கொள்ள இயல வில்லை. அவ்வாறு ஒருபோதும் அவர்கள் செய்திருக்க மாட்டார்கள் என்பதை மன்னர் அழுத்தமுடன் அமைச்சர்களுக்கு எடுத்துக்கூறி மறுத்தார். மேலும் அவர் அமைச்சர்களிடம், "இதை நான் உங்களுக்கு மெய்ப்பித்துக் காட்டுகிறேன்" என்று சொல்லி, குடம் ஒன்றின் உள்ளே நல்லபாம்பு ஒன்றை விட்டுக் கொண்டு வரச் சொல்கிறார். அவ்வாறு குடம் வந்ததும் அவர், "வைணவர்கள் மாலையை எடுக்கவில்லை என்பது உண்மையானால் இப்பாம்பு என்னைத் தீண்டாது. அவர்கள் அதைக் கவர்ந்திருந்தால் இது என்னைத் தீண்டிக்கொல்லுக!" என்று சொல்லிக் குடத்தினுள் கையைவிட்டார். அந்நாகம் அவரை எதுவும் செய்ய வில்லை. வெளியே வந்த அது, குலசேகரரைப் பணிந்து வணங்கிப் படமெடுத் தாடியது.

அமைச்சர்கள் தங்கள் தவறு வெளிப்பட்டதை உணர்ந்து அஞ்சினர். அரசரால் தங்களுக்கு யாது விளையுமோ என எண்ணி நடுக்கம் கொண்டனர். தாங்கள் மறைத்து வைத்திருந்த மாலையைக் கொண்டு

வந்து மன்னவர் முன்னே வைத்து, தங்கள் பிழையைப் பொறுத்துக் கொள்ளவேண்டி அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அருள் நெஞ்சம் கொண்டவ ரல்லவா அரசர்! அவரும் அமைச்சர்களை மன்னித்து, "இனி நீங்கள் திருமால் பக்தர்களுக்குப் பணிவிடை செய்து வாருங்கள். இதுவே உங்கள் பிழை நீங்க வழி" எனக் கூறினர். அமைச்சர்களும் இதை இசைந்து ஏற்றுக்கொண்டனர்.

பின்னர் இவர் மனம் அரச வாழ்வை விரும்ப வில்லை. தம் மகன் திடவிரதனுக்கு முடி சூட்டிவிட்டு மகனுக்கும் அமைச்சர்களுக்கும் அறிவுரைகள் அளித்து விட்டுத் திருவரங்கம் சென்றார். அங்குள்ள பெரிய கோயில் பெருமாளை வாழ்த்தி வணங்கி வந்தார். நாளும் இறைவன் திருப்பணிகளை வழுவாது செய்து கொண்டிருந்தார். பின்னர் அங்கிருந்தும் பல திருத் தலங்களுக்குச் சென்று ஆங்காங்கு எழுந்தருளியுள்ள பெருமாளைக் கண்டு வணங்கி வாழ்த்தி அனுபவித் தார்.

இவர் பெரிய பெருமாளுகிய இராமபிரானிடம் பேரன்பும் ஈடுபாடும் கொண்டவராதலால் இவரைப் பெருமாள் எனவும் குலசேகரப் பெருமாள் எனவும் வைணவப் பெரியோர்கள் அழைப்பார்கள்.

### அருளிய திருமொழிகள்

இவர் அருளிய திருமொழிகள் 'பெருமாள் திரு மொழி' எனப்படும். இவை பத்துத் திருமொழிகள். இவற்றுள் இரண்டு, ஐந்து, ஆறு ஆகியவை பத்துப் பத்துப்பாசுரங்கள் கொண்டவை. மூன்றும் திருமொழி

ஒன்பது பாசுரங்கள் கொண்டது. ஏனைய திரு மொழிகள் ஒவ்வொன்றும் பதினொரு பாசுரங்கள் கொண்டவை. ஆக இவர் அருளிய பாசுரங்களின் தொகை நூற்று ஐந்தாகும். வடமொழியில் இவர் அருளியது முகுந்தமாலை என்னும் நூலாகும்.

**பாடப்பட்ட தலங்கள்**

இவர் பாடிய திருத்தலங்கள் திருவரங்கம், திருக் கண்ணபுரம், திருச்சித்திரகூடம், திருவித்துவக்கோடு, திருவேங்கடம், திருவயோத்தி, திருப்பாற்கடல் ஆகியவையாகும்.

'திருவரங்கத்தில் பள்ளி கொண்ட பெருமானை என் கண்ணிணைகள் கண்டு களிக்கும் நாள் எந்நாளோ' என்று இவர் கூறுவது திருவரங்க நாதரிடம் இவருக் குள்ள பெருங்காதலை அறிவிக்கும். வித்துவக்கோட்டு அம்மானை இவர் பாடும் போது, 'சினத்தினால் பெற்ற தாய் துரத்தினாலும் அவளது அருளை நினைந்து அழு கின்ற குழந்தை போல் இருந்தேனே' என்பதிலிருந்து இவரது பக்தியின் பெருங்கனிவை உணர்ந்து கொள்ள லாம்.

> **"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!**
> **நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் வாயில்**
> **அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்**
> **படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே!"**

போன்ற பாசுரங்கள் திருவேங்கடமுடையானிடம் இவருக்கிருந்த ஆராத காதலைத் தெரிவிக்கும்.

**"மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே!**
**தென் இலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்!**
**செம்பொன்சேர்**
**கன்னிநன் மாமதில் புடைசூழ் கணபுரத்து என்கரு**
**மணியே!**
**என்னுடைய இன்னமுதே! இராகவனே தாலேலோ!**

என்று தொடங்கும் இவரது தாலாட்டுத் திருப்பதிகப் பாசுரங்களும் இவை போன்ற ஏனைய பாசுரங்களும் இராமாவதாரத்தில் இவருக்குள்ள ஈடுபாட்டை விளக்கும்.

இவர் பல திருத்தலங்கள் சென்று பெருமாளைப் பாடிப் பரவி, நம்மாழ்வார் அவதார இடமான திருக்குருகூர் வந்து அதன் அருகேயுள்ள பிரமதேசம் என்னும் ஊரை அடைந்தார். இங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமானை வணங்கித் திருத்தொண்டுகள் செய்து தமது அறுபத்தேழாவது வயதில் அமலன் திருவடி நிழலடைந்து பேரின்பப் பேறு பெற்றார்.

### வாழ்த்துப் பாடல்

**அஞ்சனமா மலைப்பிறவி யாதரித்தோன் வாழியே**
**அணியரங்கர் மணத்துணை அடைந்துய்ந்தோன் வாழியே**
**வஞ்சிநக ரந்தன்னில் வாழவந்தோன் வாழியே**
**மாசிதனிற் புனர்ப்பூசம் வந்துதித்தான் வாழியே**
**அஞ்சலெனக் குடப்பாம்பில் அங்கையிட்டான் வாழியே**
**அனவரதம் இராமகதை அருளுமவன் வாழியே**
**செஞ்சொல்மொழி நூற்றஞ்சும் செப்பினன் வாழியே**
**சேரலர்கோன் செங்கமலத் திருவடிகள் வாழியே!**

# 7. பெரியாழ்வார்

நீண்ட நெடுங்காலமாய் எல்லாவகையிலும் சிறப்புற்றுத் திகழ்வது பாண்டிய நாடு. இந்நாட்டில் அமைந்துள்ள திருத்தலம் ஸ்ரீ வில்லிபுத்தூர். இவ்வூர் வில்லி என்பவனுல் உருவாக்கப்பட்டதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டதாகக் கூறுவர்.

இங்கு அந்தணர் மரபில் வேயர் குலம் என்ற சீர் மிக்க குடியில் முகுந்தர் என ஒருவர் வாழ்ந்து வந்தார். இவரது அன்பு மனைவியார் புதுமை என்னும் நல்லாள் ஆவர். இவர்களுக்கு ஆனித் திங்களில் வளர்பிறைக் காலத்தில் சுவாதி நட்சத்திரத்தில் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. இக்குழவியே பிற்காலத்தில் திரு ஞானச் செல்வராய்த் திகழ்ந்து, பாமாலை பாடிய பெரியாழ்வார் ஆவர்.

**மாயவனுக்கு மலர் மாலை**

இளம் பருவம் முதல் விஷ்ணுபெருமானிடம் அளவுகடந்த பக்தி கொண்டிருந்தார். எந்நேரமும் அப்பெருமானையே மனத்திலெண்ணி, வழிபட்டு வந்தார். எனவே இவருக்கு விஷ்ணுசித்தர் என்னும் பெயர் ஏற்பட்டது. திருமாலுக்குத் திருத்தொண்டு செய்ய விரும்பிய இவர், அப்பெருமானுக்கு

நாளும் மலர் மாலே சாத்தித் துதிக்க எண்ணிஞர். இதற்காகச் சிறந்த நந்தவனம் ஒன்றை அமைத்தார். அதில் நறுமணம் கமழும் மலர்ச் செடிகளேயும் கொடி களேயும் நட்டு வளர்த்து வந்தார். இச்செடி கொடி களில் மலரும் மலர்களேயும் திருத்துழாயையும் கொய்து மாலேயாகக் கட்டி இங்கு வடபெருங் கோயிலில் எழுந்தருளியுள்ள எம்பெருமாளுக்குச் சார்த்தி வழிபட்டு வந்தார்.

இக்காலத்தில் பாண்டிய நாட்டை வல்லபதேவன் என்னும் மன்னவன் ஆட்சி புரிந்து வருகிருன். இவன் கல்வியில் தேர்ச்சியும் கலேயில் பற்றும் கொண்டவன். ஞானத் தேட்டம் மிகுந்தவன். குடிமக்களேத் தன் உயிராக எண்ணிப் பேணி வந்தவன். ஆட்சி செம்மை யாக நடைபெற்றதால் இவன் எவ்விதக் குறையு மின்றி மகிழ்ச்சியாக வாழ்வை நடத்திக் கொண் டிருந்தான்.

ஒருநாள் நடுஇரவு இவன் நகரசோதனே செய்து கொண்டு வரும்போது ஒரு வீட்டுத் திண்ணேயில் ஒருவன் படுத்திருப்பதைப் பார்க்கிருன். அவன் அருகே சென்று மன்னன் அவனேப்பற்றிக் கேட்டதும், அவன் தான் ஓர் அந்தணன் என்றும் தீர்த்தயாத்திரை செய்து கொண்டு வருவதாகவும் தெரிவிக்கிருன். அவனிடம் உரையாடிய மன்னன் வல்லபன், ‘இம்மை யிலேயே மறுமைக்கு வேண்டியவற்றைச் செய்து கொள்ள வேண்டும்'' என்ற அறிவுரையை அவனிட மிருந்து பெறுகிருன்,

### மன்னவன் ஏற்பாடு

மறுநாட் காலை தன் புரோகிதராகிய செல்வ நம்பியிடம் இது குறித்து மன்னன் ஆலோசனை செய்கிறுன். அவர் அவனிடம், வித்துவான்களின் அவை ஒன்றைக் கூட்டி, அவர்களிடம் உயர்கதி தரும் உண்மைப் பொருளினை ஆராய்ந்து தெரிவிக்க வேண்டிக் கொள்ள வேண்டும், என அறிவிக்கிருர். மன்னனுக்கும் அதுவே தக்கவழி எனப்படுகிறது. எனவே தன் அவையில் கம்பம் ஒன்றை நட்டு, அதில் பெரும் பொற்குவியல் கொண்ட கிழி ஒன்றைத் தொங்க விடச் செய்தான். 'உண்மைப் பொருளை எவர் தத்துவ விளக்கங்களால் அறிவிப்பாரோ அவரே இப்பொருளுக்கு உரியவராவர்' என்று முரசறைவித்தும், தூதர்கள் வழி திருமுகங்கள் அனுப்பியும் தெரிவிக்கிருன்.

இவ்வறிவிப்பைக் கேட்டுப் பண்டிதர்கள் மன்னன் அவையில் வந்து திரண்டனர். அவர்கள் தாங்கள் கண்டறிந்த உண்மையினை எடுத்து விளக்கி உரையாற்றினுர்கள். அவர்கள் விளக்கம் உண்மைப் பொருளை உணர்த்தவில்லை. எனவே அப்பொற்கிழி அவருள் யாருக்கும் கிடையாது போயிற்று.

### எம்பெருமான் கனவில் தோன்றுதல்

வைகுந்தப் பெருமான் விஷ்ணுசித்தர் கனவில் தோன்றி, "உடனே நீ புறப்பட்டு மதுரையில் பாண்டியன் அவைக்களம் சென்று, "உண்மைப்

பொருள் திருமால் என்பதை ஆதாரங்களோடு நிலை நாட்டிப் பொற்கிழியை அறுத்துக் கொண்டு வருக!" என அருளினர்.

விஷ்ணுசித்தர் பெருமானிடம், "ஞானம் இல்லாத அடியேனல் இது இயலும் செயலோ?" என்கிருர்.

"இதுபற்றி உனக்கேன் கவலை?" அந்தப் பொறுப்பு எமக்குரியதல்லவா, புறப்படு" என்று எம் பெருமான் அருளவும் விஷ்ணுசித்தர் இறைவன் திருவருள் கட்டளையை வியந்தவாறு மறுநாட் காலை புறப்பட்டு மதுரை சேர்ந்தார். அங்கு அவர் அறிஞர்களும் பண்டிதர்களும் கூடியுள்ள செழியன் அவைக் களம் புகுந்தார்.

## மன்னனது வரவேற்பு

விஷ்ணுசித்தரைக் கண்டதும் பாண்டிய மன்னன் வல்லபதேவனும் புரோகிதர் செல்வநம்பியும் காந்தத்தால் ஈர்க்கப்படும் இரும்புபோலாயினர். இருவரும் அவரை மிக்க மதிப்புடன் வரவேற்று, வணங்கிப் பொன்னுலான இருக்கை ஒன்றில் இருக்க வைத்தனர்.

அறிஞர்கள் கூட்டத்தில் இப்படி ஒருவருக்கும் மட்டும் தனி மதிப்பளித்து பொன்னுசனத்தில் அமர வைத்தது அவர்களுக்குப் பொருமையையும் சினத்தையும் ஏற்படுத்தின. மன்னனிடம் இவர்கள், "நான் மறைகளிலும் ஞானத்திலும் தேர்ச்சி பெற்ற எங்களை இழிவுபடுத்தும் வகையில் எங்கிருந்தோ

வந்த இவருக்கு மதிப்பளித்துப் பாராட்டுவது தக்க தல்ல'' எனக் கூறினார்கள்.

### உண்மைப் பொருள் உரைத்தல்

மன்னன் இம்மொழிகளைப் பொருட்படுத்த வில்லை. அவன் தூண்டுதல் படி புரோகிதர் செல்வ நம்பி விஷ்ணுசித்தரிடம் வந்து, ''தேவரீர், உய்வு தரும் உண்மைப் பொருளை எங்களுக்கு உணர்த்தி யருள வேண்டும்'' என வேண்டிக் கொண்டார்.

எம்பெருமானைத் தியானித்து அவனருள் பெற்ற விஷ்ணுசித்தர் அரசவை நடுவே வந்து, வேதமுடிவா யுள்ள உண்மைப் பொருளைத் தம் விளக்க உரையால் தெரிவித்தார். திருமால் பெருமானின் திருவடித் தாமரைகளே அனைவருக்கும் உய்வளிக்கும் அரும் மருந்து என்பது அவரது உரையின் கருத்தாய் இருந்தது. கற்றோரும் மற்றோரும் கேட்டுக் களிப்புற்று மனத் தெளிவு கொள்ளும் விதத்தில் அவரது உரைகள் அமைந்திருந்தன.

இவரது தத்துவ விளக்கத்தைக் கேட்ட பண்டிதர்களும் அறிஞர்களும் அக இருள் நீங்கப் பெற்றனர். அவர்கள் தாங்கள் கொண்ட பொறாமை யும் சினமும் பிழை என உணர்ந்தனர். வல்லபதேவ னும் செல்வநம்பியும் பிறரும் விஷ்ணுசித்தர் திருவருள் ஞானத்தை வியந்து போற்றி அவர் முன் வீழ்ந்து வணங்கினர். அங்குப் பொற்கிழி கட்டப் பெற்றிருந்த கம்பம் தானாக வளைந்து அவர் முன்னே வர 'இறைவன் திருவருள் இது' என எண்ணி இவரும் அதை அறுத்தெடுத்துக் கொண்டார்.

## உலா வருதல்

பின்னர் மன்னன் ஆணையால் மாநகர் அழகு செய்யப்பட்டது. மாடங்கள் தோறும் கொடிகள் கட்டப் பெற்று அசைந்தாடின. எங்கும் தோரண கம்பங்கள் நாட்டப் பெற்று எழில் வீசின. வாழைகள் நட்டு மலர்மாலைகள் தொங்கவிடப்பட்டன. பார்க்கும் இடமெல்லாம் அழகுத் திருக்காட்சி!

பாண்டிய மன்னன் விஷ்ணுசித்தருக்குப் பட்டர் பிரான் என்னும் திருப்பட்டம் சூட்டிப் பரவினன். இவரைப் பட்டத்து யானைமீது அமர வைத்து, குடை நிழல் விரிக்க சாமரை ஆலவட்டப் பணிகள் நடக்க, அலங்கரிக்க பெற்ற நகரில் உலா வர வைத்தான். "விழுமறையின் பொருளோதிக் கிழியறுத்த பெருமான் வந்தார், உண்மைப் பொருளை உல கோர்க்கு விளக்கியுரைத்த உத்தமர் வந்தார், பரந் தாமன் நெறிகாட்டிய பட்டர் பிரான் வந்தார்." என்பனபோன்ற வாழ்த்தொலிகள் வீதிதோறும் முழங்க, மக்கள் இவரை வரவேற்றுப் புகழ்ந்தார்கள்; வாழ்த்தி வணங்கினர்கள்.

## திருக்காட்சிப் பேறு

இவ்வாறு இவர் உலா வரும்போது பெருமாள் பிராட்டியுடன் கருடன் மீதமர்ந்து விண்ணவர் புடை சூழ இவருக்கும் மன்னருக்கும் காட்சியளித்தருளினர். ஆதிமூலமான வேதநாயகன் வைகுண்டம் விட்டுப் பூவுலகம் வந்ததால் பெருமானுக்கு ஏதேனும் விளை யுமோ என இவர் அஞ்சுவாராயினர். எம்பெரு

மானுக்கு எக்குறையும் நேராதிருக்க வேண்டுமென வாழ்த்தித் திருப்பல்லாண்டு இசைத்தார்.

### திருக்கோயில் திருப்பணி

மன்னரால் மாநகர் உலாவிழாவும் பிற சிறப்பு களும் நடந்தேறியபின் விஷ்ணுசித்தர் வல்லபதேவரி டமும் செல்வநம்பியிடமும் விடைபெற்று வில்லி புத்தூர் வந்தணைந்தார். தாம் கொண்டு வந்த பொற்கிழிப் பொருளை வடபெருங் கோயிலுடையான் திருமுன் வைத்து அதை அவருக்கே உரிமையாக்கினர். அப்பொன் பொருளைக் கொண்டு கோயிலைப் புதுப்பித்துக் கோபுரத் திருப்பணியும் செய்தார். வழக்கம்போல் மீண்டும் அவர், இறைவருக்கு மாலைகள் சார்த்தி வணங்கித் திருத்தொண்டுகள் செய்து கொண்டிருந்தார்.

கண்ணன் திரு அவதாரச் சிறப்பில் இவர் தம்மையே மறந்திருந்தவர். அத்திரு வரலாறு இவரது உள்ளத்தில் பேரானந்த உணர்வைப் பெருக்கெடுக்க வைத்தது. அவ்வுணர்ச்சித் தோய்வில் இவர் அவ் அவதாரச் சிறப்பை நாற்பத்து நான்கு திருமொழி களாகத் திருவாய் மலர்ந்துள்ளார். பாசுரங் களின் மொத்த எண்ணிக்கை நானூற்று அறுபத்து ஒன்றாகும். இவற்றுடன் திருப்பல்லாண்டுப் பாசுரங்கள் பன்னிரண்டும் சேர்த்தால் இவர் பாடிய பாசுரங்களின் எண்ணிக்கை நானூற்று எழுபத்து மூன்று ஆகும். இவரது பிரபந்தம் 'பெரியாழ்வார் திருமொழி, என்று வழங்கப்படும், இது திவ்வியப் பிரபந்தம் திருநூலில் முதலில் அமைந்துள்ளது.

## திருநாமச் சிறப்புகள்

ஆழ்வார்களில் ஏனையவர்கள் தங்கள் வாழ்க்கை உயர்வை இறைவனால் பெற எண்ணியவர்கள். ஆனால் பெரியாழ்வாரோ பரந்தாமன் வாழ்வையே தமக்கு வாய்த்த பேறாகக் கருதியவர். மற்றவர்கள் பெருமாள் துணைகொண்டு அச்சம் நீக்கியவர்கள். இவரோ பெருமானுக்கு ஏதேனும் நேர்ந்து விடுமோ எனக் தாம் அஞ்சியவர்.

விஷ்ணுசித்தர் இவ்வளவு சிறப்பு மிக்கவரான தால் இவரைப் 'பெரியாழ்வார்' என்னும் திருநாமம் கொண்டு வைணவப் பெரியார்கள் அழைப்பர். மன்னர் வல்லபதேவரால் கொடுக்கப்பட்ட பெயர் பட்டர்பிரான். பொற்கிழி தம்முன் வளைய அதை இவர் அறுத்தெடுத்தமையால் இவருக்குக் கிழியறுத் தார் என்ற பெயரும் உடையதாயிற்று. இன்னும் ஸ்ரீ வில்லிபுத்தூர்கோன், புதுவைக்கோன் என்ற திருப் பெயர்களும் இவருக்குண்டு,

## பாடப்பெற்ற திருத்தலங்கள்

திருவரங்கம், திருவெள்ளாறை, திருப்பேர்நகர், திருச்சித்திரகூடம், திருக்கண்ணபுரம், கும்பகோணம், திருமாலிருஞ்சோலைமலை, திருக்கோட்டியூர். ஸ்ரீவில்லி புத்தூர், திருக்குறுங்குடி, திருவேங்கடம், திருவயோத்தி, சாளக்கிராமம், வதரியாச்சிரமம், திருக்கங்கைக்கரைக்கண்டம், துவாரகை, வடமதுரை, திருவாய்ப்பாடி, திருப்பாற்கடல், பரமபதம் முதலிய திருத்தலங்களை இவர் பாடியுள்ளார்,

## வாழ்த்துப் பாடல்

நல்லதிருப் பல்லாண்டு நான்மூன்ருேன் வாழியே
நானூற் றறுபத்தொன்றும் நமக்குரைத்தான் வாழியே
சொல்லரிய வானி:தனிற் சோதிவந்தான் வாழியே
தொடைசூடிக் கொடுத்தாளைத் தொழுமப்பன் வாழியே
செல்வநம்பி தனைப்போலச் சிறப்புற்ருன் வாழியே
சென்றுகிழி யறுத்துமால் தெய்வமென்ருன் வாழியே
வில்லிபுத்தூர் நகரத்தை விளங்கவைத்தான் வாழியே
வேதியர்கோன் பட்டர்பிரான் மேதினியில் வாழியே.

# 8. ஆண்டாள்

முன்பு திரேதாயுகத்தில் விதேக நாட்டில் மிதிலை நகரில் சனகவேந்தன் யாகசாலை அமைப்பதற்காகக் கலைப்பை கொண்டு பூமியை உழும்போது, அவ்வுழு மடைச்சாலில்திருமகள் அம்சமாக ஒரு மகள் தோன்ற, அவ்வரசன் அவளைத் தன் புதல்வியாக எண்ணி சீதை என்னும் திருப்பெயரையும் சூட்டிச் சீர் சிறப்போடு வளர்த்து வந்தான். அதைப்போன்று பின்பு கலியுகத் தில் பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வார், எம்பெருமானுக்கு மலர்மாலை சார்த்த அமைத்த நந்தவனத்தில் பாத்தியமைக்க நிலத்தைக் கொத்திய அளவிலே, திருமகள் பூமகளின் அமிசமாய் பெண் குழந்தை ஒன்று, ஆடித்திங்கள் வளர்பிறையில் பூர நட்சத்திரத்தில் தோன்றியது. இக் குழந்தையைக் கண்ட பெரியாழ்வார் நெஞ்சத்தில் களிப்பு பொங்கிப் பெருகியது. அம்மகவை அன்போடு எடுத்துவந்து, தம் குழந்தையாகவே பாவித்து, கோதை எனப் பெயரும் இட்டார். சீரோடும் சிறப் போடும் வளர்த்து வந்த இப்பெண்மகளுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து பரம ஞானத்தைப் போதித்தார்.

## இளம் பருவத்திலேயே இறைவன் நினைவு

தந்தையும் பிறரும் கண்டு வியக்கும்படி இவர் தம் இளம்பருவத்திலிருந்தே நீலமேனி நெடுமால் பெரு மானிடம் எல்லையில்லாத பக்தி கொண்டிருந்தார். இப் பக்திப் பெருக்கால் அப்பெருமானையே மணம் செய்து கொள்ளக் கருதினார். காலமெல்லாம் எம்பெருமான் கருணையை எண்ணிக் களிப்பும் வியப்பும் கொள்ளுத லும், ஏற்றித் துதித்தும் புகழ்தலும் இவரது பழக்கங் களாக இருந்தன.

விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வார் வட பெருங்கோயில் பெருமானுக்குச் சாத்தும் பொருட்டு மலர்மாலை கட்டிவைப்பார். கோதை அவர் இல்லாத போது அத்திருமாலையைத் தம் குழலிலே தரித்தவாறு, 'அப்பெருமானுக்கு நான் நேர் ஒத்து இருக் கின்றேனோ' எனத் தம்மைப் பெருமானோடு ஒப்பிட்டுக் கற்பனையில் திளைப்பார். அழகிய அணிகலன்களை அணிந்து, பட்டாடை உடுத்து, தம்மை ஒப்பனைகள் செய்துகொண்டு அதனைக் கண்ணாடியில் பார்த்து எம் பெருமான் நினைவில் தோய்ந்து நிற்பார். தந்தை வந்து காணுமுன் தாம் குழலில் சூடிய மலர்மாலையைக் கழற்றி எடுத்துப் பூங்கூடையினுள் வைத்துவிடுவார். நாள்தோறும் இதுவே கோதையார் செயலாக இருந் தது.

மறைவாக நடக்கின்ற இச்செயலை அறியாத தந்தையார், அம்மாலையைக் கொண்டு போய் வட

பெருங்கோயிலுடையானுக்குச் சார்த்திக்கொள்ள, அவரும் அதை விருப்புடன் ஏற்றருளினர்.

### கோதையார் செயலைத் தந்தையார் காணுதல்

இவ்வாறு நடந்து வருகையில் ஒருநாள் வெளியில் சென்றிருந்த ஆழ்வார் விரைவிலேயே வீட்டுக்குத் திரும்பி வந்தார். அங்குக் கோதையார் குழலில் சூடி யிருந்த இறைவனுக்குரிய மாலையைக் காணுகிறார். அவருக்குச் சினம் பொங்குகிறது. அவர் தம் புதல்வி யிடம், "பெண்ணே, நீ செய்த இச்செயல் மிகப் பாவ மானது. இனி இத்தகைய செயலைச் செய்யாதே" என அறிவுரை வழங்கினர். வடபத்திரசாயியாகிய இறை வனுக்கு அன்று மாலை சார்த்தும் திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்ததே என எண்ணி மனம் வருந்திக் கொண்டிருந்தார்.

### ஆழ்வார் கனவில் அனந்த சயனர்

அன்று இரவில் அனந்த சயனப் பெருமான் ஆழ்வார் கனவில் தோன்றி, "இன்று ஏன் நீ நமக்கு மாலை கொண்டு வரவில்லை?" என வினவினர்.

ஆழ்வார் தம் புதல்வியாரின் பொருந்தாச் செயலை அறிவிக்கவும், பெருமான் ஆழ்வாரிடம், "அவள் சூடிக் கொடுத்த மாலையே நறுமணம் மிக்கது. நமது உள்ளத்துக்கு மிகவும் விருப்பமானது. எனவே இனி அத்தகைய மாலையையே நமக்குக் கொண்டு வருவாய்" என அருளிச் செய்தார்.

துயில் நீங்கிய ஆழ்வார் அளவிலா வியப்பும் ஆனந்த உணர்வும் கொண்டார். தம் மகளாக வளர்ந்து வரும் அம்மங்கை மலர்மங்கையின் அவதாரம் என அவருக்குப் பட்டது. அனைத்துலகுக்கும் அன்னையாய், அன்புகொண்டு அவற்றை ஆண்டுவரும் திருமகளின் அவதாரமாக எண்ணி அவளுக்கு ஆண்டாள் என்ற பெயரையும் கோவிந்தனுக்குரிய மாலையினைத் தான் சூடிக்கொண்டு பார்த்து, பின்பு கொடுத்த காரணத்தால் 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என்னும் பெயரையும் இட்டு அழைத்து வரலானார்.

**இறைவனைக் காதலித்தல்**

ஆண்டாளின் பருவம் வளர வளர அவரது இறை பக்தியும் ஈடுபாடும் வளர்ந்து கொண்டு வந்தன. தமக்குப் பொருந்திய காதலனாகக் கருதிய அச்சுதன்மீது காதல் மிக்கவராய், அப்பெருமானை ஒரு கணப் பொழுதும் கூடாதிருக்கப் பொறாதவராய், கண்ணனது பிரிவை ஆற்ற இயலாத ஆய்க்குல மங்கையர்போல் தாமும் நோன்பு நோற்று, உயிர் தரித்திருந்தார். தம் அக எண்ணத்தையும் ஆர்வத்தையும் திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்ற திவ்விய பிரபந்தங்களின் மூலம் எம்பெருமானிடம் விண்ணப்பம் செய்து வந்தார்.

**திருமணப் பேச்சும்**
**திருந்திய பதிலும்**

இவ்வாறு நாட்கள் கழிந்து வருகையில் ஆண்டாளுக்கு மணவினைக்குரிய பருவம் வந்ததைக்கண்ட

விஷ்ணுசித்தர் இவரிடம் அதுகுறித்தும் பேசத் தொடங்கினர்.

"மானிடர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" எனப் பதிலளித்தார் ஆண்டாள்.

பட்டர்பிரான் கோதையாரிடம், "பின்னே எங்ஙனம் நிகழ்வது?" எனக் கேட்கவும் சூடிக் கொடுத்த கோதையார், "பெருமாளுக்கு உரியவளாக இருக்கிறேன்" எனப் பதிலளித்தார்.

**இறைவன் பெருமைகேட்டு**
**இன்பத்தில் திளைத்தல்**

விஷ்ணுசித்தர் ஆண்டாளிடம், "நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் எழுந்தருளியுள்ள எம்பெருமாள்களுள் நீ யாருக்கு வாழ்க்கைத் துணைவியாக விரும்புகிறாய்!" எனக் கேட்கிறார்.

கோதையார் தந்தையாரிடம் அங்கெல்லாம் எழுந்தருளியுள்ள இறைவனுடைய சிறப்புகளை விரிவாக எடுத்துக் கூறவேண்டும்" என வேண்டிக் கொள்கிறார்,

விஷ்ணுசித்தரும் அவ்வாறு எடுத்து அருளிச் செய்து வருகையில் ஆண்டாள், வடமதுரையில் எழுந்தருளியுள்ள கண்ணபிரான் வரலாற்றைக் கேட்டதும் மயிர்ச்சிலிர்ப்புக் கொள்கின்றார். திருவேங்கடம் பெருமானைப் பற்றிக் கேட்டதும் அவரது முகம் மலர்ச்சி பெறுகின்றது. திருமாலிருஞ்சோலை அழகரது வடிவழகை அறிந்ததும் மனம் மகிழ்ச்சி கொள்கிறது.

'திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையால் அடி வருடப் பள்ளிகொள்ளும் கரு மணியாகிய அரங்கப் பெருமானின் சிறப்பைக் கேட்ட தும் கோதையார் ஆனந்தப்பெருங்கடலில் மூழ்கினர். அரங்கநாதனையே மனத்தில் நிறுத்தி, அவனுக்கே தம்மை மணப்பெண்ணாக நிச்சயப்படுத்தி அவன் நினை வாகவே எப்போதும் இருந்து கொண்டிருந்தார். அப் பெருமானை எண்ணி,

**''கருப்பூரம் நாறுமோ! கமலப்பூ நாறுமோ?**
**திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ?**
**மருப்பு ஒசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்**
**விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்-ஆழி வெண்சங்கே!**

என்பார். அவர் தம்மை மணம் செய்து கொள்வது போன்ற நினைவில் மூழ்கிக் கனவுகள் காணும் கோதையார்.

**''மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்று-ஊத**
**முத்துஉடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்**
**மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்துஎன்னைக்**
**கைத்தலம் பற்றக்கனக் கண்டேன், தோழீ! நான்**

**இம்மைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் பற்று ஆவான்**
**நம்மை உடையவன், நாராயணன் ஆவான் நம்பி**
**செம்மை உடைய திருக்கையால் தாள்பற்றி**
**அம்மி மிதிக்கக் கனக்கண்டேன் தோழீ! நான்''**

என்பன போன்ற பாசுரங்களால் அவற்றை வெளிப் படுத்துவார்.

### பிரபந்தச் செல்வங்கள்

எம்பெருமானை எவ்வாறு அடைவது எனக் கோதையார் சிந்தனை செய்த போது, திருமால் திரு

வாய்ப்பாடியில் கண்ணனாக அவதரித்த காலத்தில் அங்குள்ள மங்கையர்கள் அப்பெருமானை அடைந்த விதம் அவரது நினைவுக்கு வந்தது. எனவே இவரும் அவ்வாறு செய்ய முடிவு செய்கிறார். தம்மை அவ் வாய்ப்பாடிப் பெண்களில் ஒருத்தியாகவும் மற்றப் பெண்களை ஆயர்குல மங்கையராகவும் பாவித்துக் கொள்கிறார். தம்முடைய வில்லிபுத்தூரரையே திரு வாய்ப்பாடியாகவும்,அங்குள்ளவடபெருங்கோயிலையே கண்ணனை வளர்த்த தந்தை நந்தகோபரின் திருமாளி கையாகவும் அங்குப் பள்ளிகொண்டுள்ள வடபெருங் கோயிலுடை யானையே கண்ணனாகவும் கருத்தில் கொண்டு நோன்பு நோற்றுக் கொள்கிறார். இச் செயலை அனைவரும் அறியும் வண்ணம் திருப்பாவை என்னும் பிரபந்தத்தைப் பாடித் தெரிவித்துக் கொள் வார்.

தம் விருப்பம் நிறைவேறாத காரணத்தால் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியார், காமதேவனைக் குறித்து நோற்றல், ஆய்ச்சியர்க்கும் கண்ணனுக்கும் இடையே நடந்த வரலாற்றைப் பாவனை செய்தல், மேகம் முதலிய பொருள்களைத் தூதுவிடுதல் போன்ற மான சிக அனுபவங்களை 'நாச்சியார் திருமொழி' என்ற பிரபந்தத்தின் மூலம் வெளிப்படுத்துவார்.

**திருவரங்கனிடம்**
**நீங்காத நினைவு**

திருவரங்கநாதனின் பேரழகையெல்லாம் ஆண்டாள் அகக்கண்களிலே பார்த்துப் பார்த்து ஆனந்தப் பரவசம் கொள்கிறார். நீங்காத அப்

பெருமான் நினைவு அவரை வேதனை கொள்ள வைக்கிறது. அவர் படும் துயரங்களை,

**"எழில் உடைய அம்மனையீர்! என் அரங்கத்து**
**இன்னமுதர்**
**குழல் அழகர், வாய் அழகர், கண் அழகர், கொப்பூழில்**
**எழுகமலப் பூ அழகர், எம்மானுர் என்னுடைய**
**கழல்வளையைத் தாமும் கழல்வளையே ஆக்கினரே"**

**கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார்,**
**காவிரிநீர்**
**செய்ப்புரள ஓடும் திருவரங்கச் செல்வனுர்**
**எப்பொருட்கும் நின்று ஆர்க்கும் எய்தாது நான்மறையின்**
**சொற்பொருளாய் நின்ருர்என் மெய்ப்பொருளும்**
**கொண்டாரே!**

என்பன போன்ற பாசுரங்களால் அறிவித்துக் கொள் வார்.

### இறைவர் இசைவு அருளல்

திருவரங்கப் பெருமானை உள்ளத்தில் கொண்டு அவர் நினைவில் உருகிக் கரையும் தம் புதல்வியை எண்ணிப் பட்டர்பிரான், 'இம்மங்கையை நம் பெரு மாள் திருமணம் செய்தல் கைகூடுமோ?' என்று எண்ணிக் கவலை கொண்டிருக்கையில், திருவரங்க நாதர் ஆழ்வார் கனவில் தோன்றி, "உம் திருமகளைக் கோயிலுக்கு அழைத்து வாரும். அவளை நாம் ஏற்றுக்கொள்வோம்" என்று அருளிச் செய்தார். இதைக் கேட்ட ஆழ்வார் மனமகிழ்ச்சி கொண்டார். அவருக்கிருந்த கவலையும் மறைந்தது.

பின்பு, கோயில் பரிவாரமாகியுள்ளவர் கனவிலும் எம்பெருமான் தோன்றி, "நீங்கள், குடை, கவரி,

இசைக்கருவிகள் முதலிய சிறப்புகளுடன் நமது இரத்தினப் பல்லக்கையும் கொண்டு வில்லிபுத்தூர் சென்று நம் விஷ்ணுசித்தர் திருச்செல்வி ஆண்டாளை அப்பல்லக்கில் அழைத்து வாருங்கள்'' என ஆணையறிவித்தார்.

அவர்களும் அவ்வாறே வில்லிபுத்தூர் வந்து, விஷ்ணுசித்தரிடம் நம் பெருமாள் அருளிய கட்டளையை விண்ணப்பித்தனர். அவர் மிக்க மகிழ்ச்சி கொண்டு வடபெருங் கோயிலுடையான் திருச் சந்நிதியில் இசைவு பெற்றுப் பயணத்துக்கு ஆயத்தமாயினர்.

### மன்னர் செய்தியறிந்து மங்கலப் பணிகளில் ஈடுபடல்

பாண்டிய மன்னர் வல்லபதேவர் இச்செய்தியைக் கேள்வியுற்று பெருங்களிப்பில் மூழ்கினர். தாமும் உடனிருந்து இவ்விழாவைச் சிறப்புடன் நடத்திவைக்க அவர் உள்ளம் விரும்பியது. எனவே அவர் தம் ஏவலாளர்களிடம் ஸ்ரீவில்லிபுத்தூருக்கும் திருவரங்கரத்துக்கும் நடுவிலுள்ள நெடுவழியை அழகுபடுத்த ஆணை வழங்கினர். அந்நெடுவழி முழுதும் நீர் தெளித்தும், பூப்பந்தர் அமைத்தும், தோரணங்கள் கட்டியும், வாழை கமுகுகள் நாட்டியும் அலங்கரிக்கப்பட்டது. பின்னர் மன்னர் தம் படைகளோடு ஸ்ரீவில்லிபுத்தூர் வந்து ஆழ்வாரை அணுகினர்.

### திருவரங்கத் திருப்பயணம்

இறைவனது திருவருளை வியந்துகொண்டார் பட்டர்பிரான். ஆண்டாளை அவரது தோழிகள்

புனிதத் தீர்த்தத்தால் நீராட்டி, பொன்னுலான பட்டுடை உடுத்து, விதவித அழகினைச் செய்தனர். தோழியர் மருங்குவர, ஆண்டாள் அழகுத் திருக் கோலத்தில் மணிச்சிவிகையில் எழுந்தருளினுர்.பட்டர் பிரானும் மன்னரும் இருபுறமும் வர, ஏனையவர்கள் முன்னும் பின்னும் வர, திருவரங்கம் நோக்கிச் செல்ல லாயினர்.

"ஆண்டாள் வந்தாள், சூடிக்கொடுத்த சுடர்க் கொடி வந்தாள்; சுரும்பார் குழற்கோதை வந்தாள்; திருப்பாவை பாடிய திருச்செல்வி வந்தாள்; பட்டர் பிரான் புதல்வி வந்தாள்; வேயர்குல விளக்கு வந்தாள்" என்று பலர் திருவரவு கூறியும் வாழ்த் தொலி முழக்கியும் முன்னே செல்ல, பட்டர்பிரான், மன்னர் வல்லபதேவர் முதலியோருடன் ஆண்டாள் மணிச்சிவிகை திருவரங்கம் பெரிய கோயில் சேர்ந்து பெரியபெருமாள் மண்டபத்தை அடைந்தது.

### இறைவனுடன் கலத்தல்

அங்கு ஆண்டாள் பெரியபெருமாளைச் சேவிக்கப் பண்ணுகையில்,அப்பெருமானின் பேரழகு, இரும்பைக் காந்தம் ஈர்ப்பதுபோல் சூடிக்கொடுத்த சுடர்க் கொடியைக் கவர்ந்தது. அவர் தம் சிலம்பார்க்க, சீர்மிக்க வளையொலிக்க, கொடியேரிடையாட, காதளவோடிக் கயலெனத் திகழும் விழிகள் பிறழ, அன்னமென நடந்து, அருகிற் சென்ருர். அவர் நெஞ்சம் ஆனந்தப் பேருணர்வில் மிதந்தது. ஊனும் உயிரும் இன்பத்தில் திளைத்தன. அங்கு நாகணையை

மிதித்தேறி, நம்பெருமாள் திருமேனியில் மறைந்து அவரை என்றும் பிரியாதிருப்பாரானர்.

இவ்வாறு சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார் அரும்பேறு பெற்றதைத் தரிசித்து ஆழ்வாரும் அவரது சீடரான மன்னர் வல்லபதேவரும், பிறரும் வியப்புற்று நிற்கையில் திருவரங்கப்பெருமான் ஆழ்வாரை அருகழைத்து, ''பாற்கடல் மன்னனைப்போல் நீரும் நமக்கு மாமனாராய் விட்டீர்.'' என்று முகமன் கூறி, தமது தீர்த்தம், திருப்பரியட்டம், மாலை, திருச்சடகோப முதலியவற்றை அளித்து, ''வில்லிபுத்தூர் உறைவானுக்கே தொண்டு பூண்டிரும்'' என்று திருவாய் மலர்ந்து விடைகொடுத்தருளினர்.

ஆழ்வார் பெருமானும் ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று முன் போல் எம்பெருமானுக்கு மணம் கமழும் மலர்மாலைகளுடன் தம் உள்ளத்திலிருந்து கிளர்ந்து பொங்கிவரும் ஆர்வத்தையும் கலந்து இட்டு வழிபட்டு வந்தார். எண்பத்தைந்து ஆண்டுக் காலம் வாழ்ந்திருந்து, இவர் இறைவன் இருப்பிடம் சேர்ந்தார்.

ஸ்ரீ ஆண்டாளின் காலம் எட்டாவது நூற்றாண்டாக இருக்கவேண்டும் என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். ஒரு சாரர் ஒன்பதாம் நூற்றாண்டு என்றும் அறிவிப்பர்.

**பாடப்பெற்ற திருத்தலங்கள்**

திருவரங்கம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலைமலை, ஸ்ரீவில்லிபுத்தூர், திருவேங்கடம், துவா

ரகை, வடமதுரை, திருவாய்ப்பாடி, திருப்பாற்கடல், முதலிய திருத்தலங்கள் ஆண்டாளால் பாடப் பெற்றவையாகும்.

## வாழ்த்துப் பாடல்

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினுள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனுள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கர்க் கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பாதங்கள்வாழியே

# 9. தொண்டரடிப் பொடியாழ்வார்

சோழ வளநாட்டில் திருமண்டங்குடி என்ற ஊரில் வேத விற்பன்னராய் விளங்கிய முன் குடுமிச் சோழியரும் வைணவருமாகிய பிராமணருக்கு, சிறப்பு மிக்க மார்கழித் திங்கள் தேய்பிறையில், சதுர்த்தசி திதியில், கேட்டை நட்சத்திரத்தில் வனமாலையின் அமிசராய் தொண்டரடிப்பொடியாழ் வார் அவதரித்தார். எம்பெருமான் திருவருளால் பிறந்த இத்திருக்குமாரருக்குத் தந்தையார் விப்பிர நாராயணர் என்ற பெயரை இட்டு, உரிய பருவங் களில் செய்யவேண்டிய வைதிகச் சடங்குகளைச் செய்வித்தார். நான்மறைப் பொருளையும் பயிற்று வித்து, பிற வித்தைகளிலும் இவரை வல்லவராக் கினர்.

### சின்னஞ் சிறு பருவத்தில்

விப்பிர நாராயணரிடம் சின்னஞ்சிறு பருவத்தி லிருந்தே இறைபக்தி மிகுந்திருந்தது. செழுங் கருணைப் பெரு முகிலான திருமாலின் அருட் பெருக்கை எண்ணியெண்ணி ஆனந்தப் பரவசத்தில்

மூழ்குவார். உயிர்களை உய்விக்க இறைவர் கொண்ட அவதாரச் சிறப்புகள் அவரைப் பெருவியப்பில் ஆழ்த்தும்.

இறைவனிடம் இவ்வாறு ஈடுபாடு கொண்ட இவரது உள்ளம் இம்மை இன்பங்களை வெறுத்தது. எனவே திருமணம் செய்து கொள்ளவும் இவர் விரும்ப வில்லை. எம்பெருமான் எழுந்தருளியுள்ள திருத்தலங் கள் சென்று வழிபடஎண்ணினர். முதலில் திருவரங்கம் பெரிய கோயிலை அடைந்தார். அங்குப் பள்ளி கொண்ட பெருமானை வணங்கிக் களித்தார். அரங்க நாதரின் அற்புதப் பேரழகு இவரைக் கவர்ந்ததில் வியப்பில்லையல்லவா! இவர் இங்கேயே தங்கி இறைவ னுக்குத் தொண்டு செய்ய விரும்பினர். எம்பெரு மானுக்கு மாலை சார்த்தி வழிபடும் தொண்டு சிறந்த தெனக் கருதி, அதற்காக நந்தவனம் ஒன்றை அமைத் தார். அங்கு மணம் வீசும் மலர்ச் செடிகளையும், திருத்துழாய் செடிகளையும் நட்டு வளர்த்தார். பெரியாழ்வார் போன்று இவரும் உரிய வேளையில் மலர் மாலைகளையும் திருத்துழாய் மாலைகளையும் கட்டி இறைவருக்குச் சார்த்தி அவ்வழகைக் கண்குளிரக் கண்டு களிப்புற்று வந்தார்.

**கணிகையின் சூழ்ச்சி**

இக்காலத்தில் திருவரங்கத்தின் வடக்கேயுள்ள உத்தமர்கோயில் என்ற ஊரில், தேவதாசி குலத்தில் பிறந்த தேவதேவி என்ற இணையற்ற அழகுக் கணிகை, தன் தமக்கையுடனும் தோழியருடனும் நடனம் ஆடும் பொருட்டு சோழர் தலைநகரமான உறையூருக்கு வந்தாள். அங்குச் சோழ வேந்தன் முன்னிலையில்

தனது ஆடல் பாடல் கலைநிகழ்ச்சிகளை நடத்தி, அவனை மகிழ்வுற வைத்து, நிறைவாகச் செல்வங்களையும் பரிசுகளையும் பெற்றுத் திரும்பினாள்.

வருகின்ற வழியில் தேவதேவி தம் ஆட்களுடன் இளைப்பாறும் பொருட்டு விப்பிர நாராயணர் நந்தவனத்தின் ஒரு பக்கம் வந்து தங்கினாள். அப்பூம் பொழிலின் எழில் அவளை மிகவும் கவர்ந்தது. அங்குத் தங்கி இன்பமாகப் பொழுதைக் கழிக்க அவள் எண்ணு கிறாள். எனவே அதற்குரியானைத் தன் வயப்படுத்தும் முயற்சியில் அவள் ஈடுபட்டாள்.

தேவதேவியின் மனக்கருத்தை அறிந்த அவள் தமக்கை, அவளிடம், "இந்த நந்தவனத்துக்கு உரியவர் இறைவனிடம் உள்ளம் வைத்து, அவன் திருத்தொண்டைச் செய்து கொண்டிருப்பவர். இவரை நீ உன் வயப்படுத்த எண்ணுதல் இயலாத செயல்" எனக் கூறினாள்.

தன் பேரழகில் செருக்கு மிகக் கொண்ட தேவதேவி தமக்கையிடம்," இவனை நான் என் வயப் படுத்தாமல் விடப்போவதில்லை." என உறுதியுடன் உரைத்தாள்.

தமக்கை தங்கையிடம், "நீ அவ்வாறு செய்தால் நான் ஆறுமாத காலம் உனக்கு அடிமையாக இருப் பேன்" எனச் சூள் உரைக்கிறாள்.

"இதைச் செய்யாவிட்டால் உனக்கு நான் ஆறு மாத காலம் அடியாளாக இருப்பேன்" என அறிவிக் கிறாள் தங்கை.

பின்னர் தேவதேவி தன் நகைகளையெல்லாம் கழற்றித் தன் தமக்கையிடம் கொடுத்து, அவளையும் மற்றுள்ளோரையும் அங்கிருந்தும் அனுப்பி வைத்தாள். பின்னர் செங்காவிச் சேலை ஒன்றைத் தான் உடுத்து, விப்பிர நாராயணர் முன் வந்து அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுள். அவர் அவளிடம், "நீ யார்? ஏன் இங்கே வந்தாய்?" என வினவினுர்.

இதற்கு அவள், "நான் முன் செய்த தீவினையால் தாசி குலத்தில் பிறந்தேன். எனக்கு அத்தொழிலில் ஈடுபட விருப்பம் இல்லை. தேவரீர் திருவடியைச் சரணடைந்து உய்வுபெற வந்துள்ளேன். அநாதையான அடியாளைக் காத்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள். மேலும் அவள் அவரிடம், "செடி கொடிகளுக்கு நீர் பெய்தல், மலர் கொய்தல், மாலைகட்டுதல், பூம்பொழிலைப் பாதுகாத்தல், முதலிய பணிகளில் எதை எனக்களித்தாலும் இதயம் இசைந்து செய்யக் காத்திருக்கிறேன்" எனத் தெரிவித்தாள்.

விப்பிர நாராயணர் தேவதேவியின் கபட உள்ளத்தை உணராது. அவள் வேண்டுதலுக்கு இசைந்து கொண்டார். தாம் உண்டது போக மிகும் உணவினை அவளுக்குக் கொடுத்து உதவினுர். அவளும் அதனை வாங்கியுண்டு, தோட்டப் பணிகளில் ஈடுபட்டு, பாத்தி கொத்துதல், நீர் பெய்தல் முதலிய பணிகளைத் தவருது செவ்வனே செய்து வந்தாள். விப்பிரருக்குத் தன்னிடம் நம்பிக்கை ஏற்படும் வண்ணம் அவள் தன் செயல் முறைகளை நடத்திக் கொண்டிருந்தாள்.

## இளகிய நெஞ்சத்தால் இடர் நேர்தல்

இவ்வாறு பல மாதங்கள் கழிந்து வந்தன. ஒரு நாள் பெருமழை பெய்து கொண்டிருந்தபோது தேவதேவி நனைந்து வருதலைக் கண்ட விப்பிர நாராயணர் தமக்குள்ள இயற்கையான மனக் கருணையால் அவளைத் தாம் நிற்கும் பர்ணசாலையில் வந்து நிற்கக் கூறினர். அவளுக்கு இது நல்ல வாய்ப்பாக ஆயிற்று. தனது வஞ்சக எண்ணத்தை நிறைவேற்றத் தக்க தருணம் எனக் கருதினள். அவள் தன் இனிய மொழிகளாலும் எழில்மேனிக் கவர்ச்சியாலும் அவரைத் தன்வயமாக்கிக் கொண்டாள். சில காலம் அவருடன் வாழ்க்கை நடத்தினள். பின்னர் பொருளில்லாத அவரை வகை செய்யாது தன் இல்லம் சென்றடைந்தாள். விப்பிரருக்கு அவளது பிரிவை ஆற்ற இயலவில்லை. எனவே அவர் அவள் வீட்டு வாசல் முன்வந்து தயங்கியவாறு நின்றுகொண் டிருந்தாள்.

## இறைவன் திருவிளையாடல்

இக்காலம் திருமகள் திருமாலிடம், ''விப்பிர நாராயணன் நமக்குப் பணிசெய்துவந்த தொண்ட னல்லவா? அவனை இவ்வாறு நிலைகுலைய விடலாமா? அவனை ஆட்கொண்டு அந்தரங்க பக்தனுக்கி அருள் பாவிக்கவேண்டும்'' என வேண்டிக் கொண்டாள். நீல மேனி நெடியோனும் இதற்கு இசைவு அருளுகிறுன்.

திருக்கோயிலிலுள்ள பொன்பாத்திரம் ஒன்றை எம்பெருமான் விப்பிரநாராயணருக்குத் தெரியாது

எடுத்துக் கொண்டு மனித வடிவமுடன் தேவதேவி இல்லம் செல்கிறுர். அங்கு அவள் இவரை யாரென்று கேட்க இவர் அவளிடம், ''நான் மணவாளதாசன். விப்பிரநாராயணர் இங்கே அனுப்பி வைக்கவந்தேன்'' என்று தெரிவிக்கிறுர்.

''அவர் அனுப்ப நேர்ந்தது எதற்கோ?'' என்று அவள் வினவுகிறுள்.

எம்பெருமான் தான் கொண்டு வந்திருந்த அப் பொன்வட்டிலே அவள் கையில் கொடுத்து, ''இதை விப்பிர நாராயணர் உனக்குத் தர வைத்தார்'' என்று கூறினுர்.

பொன்வட்டிலேப் பெற்ற தேவதேவி, மிக்க விருப்பத்தோடு எம்பெருமானிடம்,'' அவரை அகத்தே வரச் சொல்லும்'' என்ருள்.

அருட்பெருங் கடலும் அடியவர்களுக்கு எளியவனு மான எம்பெருமான் விப்பிரநாராயணரிடம் வந்து, ''தேவதேவி உம்மை உள்ளே வரச்சொன்னுள்'' என்று சொல்லி மறைந்தார். இம்மொழி விப்பிரநாராயண ருக்குச் செவியில் தேன் பாய்ந்தது போல் இருந்தது. அவரது உள்ளம்குளிர்ந்து, உடல்பூரிப்புக் கொண்டது. அவர் உடனே தேவதேவி இல்லம் போய்ச் சேர்ந்தார்.

### காணுமற்போன கனகத் தட்டு

அன்றிரவு கழிந்து மறுநாள் பொழுது புலர்ந்தது. கோயிலில் இருந்த பொன்வட்டிலேக் காணுத கோயில் காப்போர் அதனே அரசனுக்கு அறிவித்தனர். அவன்

ஆணையால் காவலர்கள், கோயில் அர்ச்சகர், பரிசாரர்கள் முதலியவர்களைத் தண்டித்து வருத்தினர்கள், இதனுல் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. அவர்கள் எடுத்திருந்தால்தானே பொருள் கிடைக்கும்!

காவலர்கள் களவுபோன பொருளைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டபோது அப்பொன்வட்டில் தேவதேவியின் இல்லத்தில் இருப்பதாக அறிந்தனர். உடனே அங்குச் சென்று அவ்வீட்டிலுள்ளவர்களைக் குற்றவாளிகளாக்கி அரசன் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தினுர்கள்.

அரசன் தேவதேவியிடம், ''எம்பெருமானுக்குரிய பொன்வட்டிலை நீ கவர்ந்து கொள்ளலாமோ?'' என வினவினுன்.

அவள் அரசனிடம்,'' மன்னர் பெருமானே, இப்பாத்திரம் யாருக்குரியது என்பதையான் அறியேன். அழகிய மணவாளதாசன் என்ற ஏவலாளன் மூலமாக இந்த விப்பிரநாராயணன் இதை எனக்கு அனுப்பி வைத்தான். இவ்வளவே நான் அறிவது'' என்று பதிலளித்தாள்.

மன்னன் விப்பிரநாராயணரிடம் இது குறித்துக் கேட்க, அவர், ''ஏழையான எனக்கு ஏவலாளனே கிடையாது. வேறு எதையும் யான் அறியேன்'' என உரைத்தார்.

**விப்பிரர் சிறைப்படல்**

இருபக்கத்து வாய்மொழிகளைக் கேட்ட வேந்தன், தேவதேவியிடமிருந்து, களவுப்பொருளை வாங்கியதற்

குரிய அபராதத்தையும் பொன்வட்டிலையும் பெற்றுப் பெருமாளுக்கு அளித்தான். விப்பிரநாராயணருக்கு பொற்கலத்தைத் திருடியவருக்குரிய தண்டனையை அளிக்க அவரைச் சிறையிலடைத்தான்.

## ஆண்டவன் அருட்கனிவு

திரும்பவும் திருவரங்கநாயகி, திருவரங்க நாதரிடம் விப்பிரநாராயணருக்கு அருள்பாலிக்கக் கேட்டுக் கொண்டாள். கருணைக் கடலான பெருமாளும் மன்னவன் கனவில் எழுந்தருளி, ''கணிகையை விரும்பிய விப்பிரனது கருமத்தைத் தொலைப்பதற்காக நாமே பொன்வட்டிலைக் கொண்டுபோய்க் கொடுத்து இவன் தண்டனை பெறவைத்தோம். உண்மையில் இவன் கள்வனல்லன். தூய்மையாளனே ஆவன்'' எனத் தெரிவித்தார்.

துயில் கலைந்த மன்னன் வியப்பெய்தியவனாகத் தன் அமைச்சர்களுக்குத் தான் கண்ட கனவைத் தெரிவிக்கிறான். கழிந்ததற்கு மன்னன் கழிவிரக்கம் கொண்டு, அப்பொழுதே விப்பிரநாராயணரை விடுவித்து உபசரிப்புகள் நல்கி அனுப்பி வைக்கிறான்.

விப்பிரர், தாம் எம்பெருமான் துளவத் தொண்டினைத் துறந்து, காசை விரும்பும் கணிகையின் நாசவலையில் சிக்கி நலிந்ததை நினைந்து நினைந்து நெஞ்சம் நொந்தார். கழிந்த காலச் செயல் அவரை ஆற்றாமைக்குட்படுத்தியது. தாம் அதற்குரிய கழுவாயைச் செய்து கொள்ள விரும்பினார். பெரியோர்களை அடுத்து, அதற்குரிய பிராயச்சித்தம் எதுவெனக் கேட்க, அவர்கள் சிறந்த நூற்களை ஆராய்ந்து, 'இப் பாவம் அனைத்தும் தீர, திருமாலடியார்கள் திருவடித்

தீர்த்தத்தை உட்கொள்ள வேண்டும்' என உரைத்தனர். விப்பிரநாராயணரும் அவ்வாறே செய்து தம்மைத் தூய்மையாளராக ஆக்கிக் கொண்டார். வைணவப் பெரியோரின் திருவடித் தூளியாய், அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அடிமையாய் வாழ்ந்து வந்தார். இதனுல் அவருக்கு அதுவே பெயராய்த்'தொண்டரடிப் பொடி' என்ற திருநாமம் ஆயிற்று.

### அருளிய பிரபந்தங்கள்

பின்னர் திருவரங்கநாதரின் திருவருளால் தொண்டரடிப்பொடியார் தத்துவ ஞானம் பெற்ருர். அர்ச்சாவதாரத்தில் இவருக்கு மிக்க ஈடுபாடு ஏற்பட்டது. திருவரங்கப் பெருமானையன்றி வேறு பொருளை அறியாராய் அப்பெருமானுக்குத் துளவத் திருத்தொண்டு செய்தலே தமது பெரும் பேருகக் கருதினர். தமது இறை ஈடுபாட்டையும் அனுபவத்தையும் திருமாலை, திருப்பள்ளிஎழுச்சி என்ற திவ்விய பிரபந்தங்கள் மூலம் வெளிப்படுத்தி, உலகத்தவர் உய்வு கொள்ள உதவி நூற்றைந்து ஆண்டுகள் திருவரங்கத்திலேயே வாழ்ந்திருந்தார்.

### தேவதேவியின் திருப்பணி

தன்னிடம் அன்புகொண்டிருந்த விப்பிரநாராயணர் தொண்டரடிப் பொடியாழ்வாரான செய்தியைத் தேவதேவி அறிகிருள். தானும் நற்பேறு பெற விரும்பிய அவள், தனது பொருள் அனைத்தையும் அரங்கப் பெருமானுக்கு உரியதாக்கினுள். பின்பு கோயிலில் திருவலகிடுதல், மெழுகுதல், கோலம் இடுதல் போன்ற திருத்தொண்டுகளைச் செய்து வாழ்ந்திருந்து இறுதியில் நற்பேறு பெற்ருள்.



**பக்திச்சுவை பெருகும்**

**பாசுரங்கள்**

தொண்டரடிப் பொடிகள் அருளிச் செய்த பாசுரங்கள் அனைத்திலும் பக்திச் சுவை பொங்கிப் பெருகும். இன்னிசை ஒழுக்கு பெருக்கெடுத்தோடும், இனிய மதுரிக்கும் சொற்கள் தமிழமுதின் இயல் காட்டும்.

இந்திர உலகை ஆளும் பேற்றினும் எம்பெருமானை வாழ்த்தும் பேற்றையே இவர் தமக்கு உகப்புடைய தாகக் கொண்டு

> **''பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்**
> **அச்சுதா! 'அமரர் ஏறே! ஆயர்தம் கொழுந்தே என்னும்**
> **இச்சுவை தவிர யான்போய் இந்திர-லோகம் ஆளும்**
> **அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு**
> **ளானே!"**

என்று அருளுவார்.

மனிதன் நூறாண்டுக் காலம் வாழ்ந்தாலும் அவன் வாழ்வின் பெரும்பகுதியும் இறைவனை எண்ணாத நிலையில் பாழாகின்றது. பாதிக் காலம் உறக்கத்தில் கழிகின்றது. பதினைந்து ஆண்டுகள் பாலப் பருவத்தில் கழிந்து போகின்றது. மீதியுள்ள காலம் பிணி, பசி, மூப்பு, துன்பம் முதலியவற்றில் தீர்ந்து விடுகின்றது. இவற்றைச் சுட்டிக்காட்டித் தமக்குப் பிறவியே வேண்டாமென அரங்கப் பெருமானிடம் வேண்டுகின்றார்.

"வேதநூற் பிராயம் நூறு
மனிசர் தாம்புகு வரேலும்
பாதியும் உறங்கிப் போகும்;
நின்றதிற் பதினை யாண்டு
பேதை பாலகன் அதுஆகும்;
பிணி, பசி, மூப்புத்துன்பம்;
ஆதலால் பிறவி வேண்டேன்
அரங்கமா நகரு ளானே!

விதியின் பிழையால் நெறி தவறிய தம்மையும் இவர் நினைவுபடுத்திக் கொள்ளாமல் இல்லை. தமக்கு அருள்பாலித்துக் கடைத்தேற்றிய அரங்கநாதப் பெருமானை ஒருபோதும் மறவாத இவர், 'உய்வு விரும் பியவர்க்கு உறுதுணை அவன் ஒருவனே' என ஐயமற விளக்குகிறார்.

மெய்யர்க்கே மெய்யன் ஆகும்
விதிஇலா என்னைப் போலப்
பொய்யர்க்கே பொய்யன் ஆகும்;
புட்கொடி உடைய கோமான்
உய்யப்போம் உணர்வி னார்கட்கு
ஒருவன்என்று உணர்ந்த பின்னை
ஐயப்பாடு அறுத்துத் தோன்றும்;
அழகன்ஊர் அரங்கம் அன்றே.

### பாடப்பெற்ற திருத்தலங்கள்

திருவரங்கம், திருவயோத்தி, திருப்பாற்கடல் முதலிய திருத்தலங்கள் இவரால் பாடப்பெற்றவை யாம்.

இவர் திருமங்கையாழ்வார் காலத்தவர் என ஆராய்ச்சியாளர் கூறுவர். அவரது காலம் கி.பி. எட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதி என்பர்.

### வாழ்த்துப் பாடல்

மண்டங் குடியதனை வாழ்வித்தான் வாழியே
மார்கழியிற் கேட்டைதனில் வந்துதித்தான் வாழியே
தெண்டிரைசூழ் அரங்கரையே தெய்வமென்றான் வாழியே
திருமாலை ஒன்பதஞ்சும் செப்பினான் வாழியே!
பண்டுதிருப் பள்ளியெழுச்சி பத்துரைத்தான் வாழியே
பாவையர்கள் கலவிதன்னைப் பழித்தசெல்வன் வாழியே
தொண்டுசெய்து துன்பத்தால் துலங்கினான் வாழியே
தொண்டரடிப் பொடியாழ்வார் துணைப்பதங்கள் வாழியே!

# 10. திருப்பாணுழ்வார்

சோழ வளநாட்டின் ஐந்து பெரும் தலைநகர் களில் ஒன்று உறையூர் என்னும் பெருநகர் ஆகும். இது வரலாற்றுச் சிறப்பு மிக்கது. இங்குக் கழனியில் விளைந்த நெற்பயிர்க் கதிரில், கலியுகம் 343-துன்மதி ஆண்டு,கார்த்திகைத் திங்கள் தேய் பிறையில்-துவிதை திதி புதன்கிழமை உரோகிணி நட்சத்திரத்தில், நீல மேனி நெடியோன் ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய் திருப் பாணுழ்வார் அவதரித்தார்.

### பாணனுக்கு வாய்த்த பேறு

இத்திருக் குழந்தையை இவ்வூரில் பாணர் குலத் தில் பிறந்த ஒருவன்,நெற்பயிர் பக்கமாய் வந்தபோது கண்டான். குழந்தையின் பக்கம் யாரும் இல்லாததைப் பார்த்து, தனது நல்வினைப் பயனுக—இறைவன் தனக்கு அளித்த பேறு எனக் கருதி, அக்குழந்தையை எடுத்துத் தனது வீட்டுக்குச் சென்றுன். அவன் மனைவி குழந்தையைக் கண்டு பெரும் களிப்புக் கொள்கிருள். குழந்தை இல்லாத தன் மலடு இறைவன் பேரருளால் தீர்ந்ததாக எண்ணுகிருள். பசுவின் பால் போன்ற தூய உணவுகளைக் கொடுத்து குழந்தையைப் பேணி வளர்த்து வந்தாள்.

இறைவன் அருளால் தோன்றிய இக்குழந்தை உலகப்பற்றில் விருப்பம் இல்லாது எம்பெருமான் நினைவாகவே இருந்தது. வளர வளரத் தாம் புகுந்த குலத்துக்குரிய யாழ்ப் பாடல் பயிற்சியிலும் தேர்ச்சி பெற்றார். மற்றவரினும் இவர் யாழ்த் திறனில் மேம் பட்டு விளங்கியதால் இவரை அனைவரும் திருப்பாணர் என அழைத்தனர்.

### உள்ளம் உருகப் பாடுதல்

இவர் அரங்கப் பெருமானுக்குப் பாடலால் திருத் தொண்டு செய்யும் எண்ணத்தோடு திருவரங்கம் நோக்கிப் புறப்பட்டார். தாம் கீழ்க்குலத்தில் வளர்ந்ததால் இவர் திருவரங்கம் திருக்கோயிலில் அடி எடுத்து வைக்கத்துணியவில்லை. தென் திருக்காவிரியின் தெற்குக் கரையில் திருமுகத் துறைக்கு எதிரில் யாழும் கையுமாக நின்றவாறு திருவரங்கப் பெருமானைத் திசை நோக்கித் தொழுதார். பின்னர் அப்பெரு மானைப் பற்றிய பாடல்களைக் கேட்போர் செவி குளிர, அவர்தம் ஊனும் உளமும் உருகி நெகிழ, பாடிப் பர வினார். இப்பாடல்கள் எம்பெருமானுக்கும் மகிழ்வைத் தந்தன. இவ்வாறு இவர் நாள்தோறும் வைகறைப் போதில், பக்தியில் மூழ்கித் தம்மை மறந்த பரவச உணர்வில் பாடிக் கொண்டிருக்கும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தார்.

### முனிவரின் சினம்

திருவரங்கப்பெருமானை வழிபட்டு வரும் உலோக சாரங்கர் என்னும் முனிவர், ஒருநாள் திரு மஞ்சனத் திற்கு நீர் எடுப்பதற்காகப் பொற் குடத்தை எடுத்துக்

கொண்டு காவிரிக் கரைக்கு வந்தார். அங்கு நின்று கொண்டிருந்த திருப்பாணரைக் கண்டு அவர் அரு வெறுப்புக் கொண்டு, "அப்பாற் செல்" என்று பல முறை கூவுகிறார். திருப்பாணர், இவ்வுலகத் தொடர்பை மறந்து, எம்பெருமானிடம் முற்றிலும் ஈடுபட்டுப் பாடிக் கொண்டிருந்தமையால் அவர் கூவி விலக்கியது இவரது செவியில் படவில்லை. எனவே அவர் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தார்.

இறுமாப்பினால்தான் இவர் இப்படி நின்று கொண்டிருக்கிறாரென எண்ணிய முனிவர், மேலும் பன்முறை கூவிக் கூறியும் திருப்பாணர் விலகாததைக் கண்டு சினம் கொள்கிறார். ஒரு கல்லை எடுத்து முனிவர் வீசவும் அது திருப்பாணர் நெற்றியைத் தாக்கி, அதினின்றும் குருதி பெருக்கெடுக்கச் செய்தது. பின்னர் சூழ்நிலை உணர்வுக்கு வந்த திருப்பாணர் அங்கு-எதிரே தொலைவில் முனிவர் நிற்பதைக் கண்டு நடுங்கியவராய் அவ்விடத்தை விட்டு அப்பால் செல்கிறார்.

### பெருமாள் திருநெற்றியில்

பின்னர் உலோகசாரங்க முனிவர் பொற்குடத்தில் காவிரி நீரை முகந்து எடுத்துக் கொண்டு திருவரங்கப் பெருமான் முன் சென்றார். அங்கு எம்பெருமான் நெற்றியிலும் செந்நீர் ஒழுகிக் கொண்டிருந்தது. இதைக் கண்ட கோயில் அர்ச்சகரும் அதிகாரிகளும் அரசனுக்கு அறிவிக்கிறார்கள். அரசன் கவலை கொண்டவனாய் அமைச்சர்களை அழைத்து இது குறித்து ஆராய்கிறான். காரணம் எதுவும் புலப்படாது அவன் அப்பொறுப்பை இறைவன் திருவடிக்கே வைத்திட்டான்,

## முறையீடும் பதிலும்

ஏற்கனவே ஒருநாள் பிராட்டி பெருமானிடம், "பல காலமாய் நம்மைப் பாடி வருகின்ற பாணன் புறத்தே நிற்கப் பார்த்திருக்கலாமோ?" எனக் கேட்டுக் கொள்ள, அதற்கு எம்பெருமான் விரைவில் அவரை அருகில் அழைத்துக் கொள்வதாக வாக்களித் திருந்தார்.

எம்பெருமான் பிராட்டியின் விருப்பத்தை நிறை வேற்றவும், திருப்பாணர் பக்தியையும் அவரது தூய உள்ளத்தொண்டையும்வெளிப்படுத்திஅவருக்குஅருள் செய்யவும், ஆண்டவன் அருளுக்கு அகத்தின் பக்தியே முதன்மை என்ற உயரிய உண்மையை இவ்வுலகோர் அறியவும் திருவுளம் கொண்டார்.அவர் உலோகசாரங் கர் கனவில் தோன்றி, "முனிவ, பாணர் நமக்கு நல் லன்பர். அவரை இழிகுலத்தவர் என எண்ணுது நீர் சென்று உம்முடைய தோள்மீது அவரை எழுந்தருளச் செய்து எம்முன்னே கொண்டு வாரும்" என ஆணே வழங்கியருளினுர்.

துயில் கலைந்த உலோக சாரங்க முனிவர் ஆண்டவன் தம் கனவில் எழுந்தருளித் தமக்கிட்ட கட்டளையை எண்ணி வியப்புக் கொண்டார். இறைவர் திருவுளப்படி நடந்து நற்பேறடைய விரும்பிய அவர், எம்பெருமான் தமக்கு வழங்கிய கட்டளையை அத்திருப்பகுதியிலுள்ளார் அனைவருக்கும் தெரிவித்தார். அதை நிறைவேற்றிவிட அம்மக்க ளுடன் தாமும் திருமுகத்துறையை நோக்கிப் புறப் பட்டு அங்குத் திருப்பாணர் வழக்கமாக நின்று திருப்

பாடல் தொண்டு புரியும் இடத்தைச் சென்றடைந் தார்.

## முனிவரும் திருப்பாணரும்

திருப்பாணர் தம் காலை வழிபாட்டை முடித்து நிற்கும்போது, உலோகசாரங்கர் கூப்பிய கையின ராய் அவர் முன்னே சென்று, அவர் திருவடிகளைத் தொழுது எழுந்தார். பின்னர் அவரிடம் முனிவர், "தேவரீரைத் தம்மிடத்துக்கு எழுந்தருளப் பண்ண வேண்டுமென நம்பெருமாள் அடியேனுக்குக் கட்டளை யிட்டருளினார்" என்று தெரிவித்தார்.

பாணர் தலைவர், "இழி பிறப்பினனாகிய யான் திருவரங்கத் திருநகரை மிதிப்பேனோ?" என்று சொல்லி மறுத்திட்டார்.

இதுகேட்ட முனிவர், "தேவரீர் மிதித்திட வேண்டா. அடியேனது தோளில் ஏறியருளும்" என்று வேண்டிக் கொண்டார்.

இம்மொழிகளைக்கேட்ட திருப்பாணர் நடுநடுக்கம் கொண்டவராய் சொல் தடுமாறிய நிலையில், "மிகத் தூய்மையாளராகிய தேவரீர் அடியேனிடம் இவ்வாறு கூறுதல் தகாது. திருமாலடியார் திருப்பாதத்துக்கு என் தலையை ஆசனமாக்கும் தகுதியுடைய யான் இக் கொடுந்தொழிலுக்கு இசையேன்" என்று பதிலிறுத் தார்.

முனிவர் பாணர் தலைவரிடம் இறைவரது கட்டளை யைத் தெரிவித்து, "அது மீறுதற்குரியதோ?" எனக்

கேட்டார். என் செய்வார் வீணைப்பாடகர்! இறைவன் கட்டளையை எவ்வாறு மீறுவார்? எம்பெருமான் திரு வடிக்கே தம்மை ஒப்புவித்தவராய் மெய்ம்மறந்து நின்றார்.

முனிவர் பெருமான் திருப்பாணநாதரைத் தமது தோளில் ஏற்றிக் கொண்டு திருவரங்கப் பெருமான் திருமுன் இறக்கி விட்டார். அங்குத் திருப்பாணாழ்வார் எம்பெருமான் திருவடியை அடிமுதல் முடிவரை ஒவ் வொரு உறுப்பாகக் கண்டு கண்டு வணங்கிக் களித்தார்; நெஞ்சம் நெகிழ்ந்து ஆனந்தப் பேருணர் வில் திளைத்தார். அதிசயித்து மெய்ம்மறந்து நின்றார். தாம் அனுபவித்து உணர்ந்த பேரழகையும் பேரின்பத் தையும் மற்றுள்ளாரும் அனுபவித்து ஆனந்தப் பேறடையத் திருவுள்ளம் கொண்டு பத்துப் பாடல் களால் 'அமலநாதிபிரான்' என்ற பிரபந்தம் மூலம் அவற்றை வெளிப்படுத்துவார். தம்மை ஆட்கொண்ட பெருமானை இவர்,

**"பாரம்ஆய பழவினை பற்றுஅறுத்து என்னைத்தன்**
**வாரம்ஆக்கி வைத்தான்; வைத்ததுஅன்றி என்உள் புகுந்தான்**
**கோர மாதவம் செய்தனன்கொல்! அறியேன் அரங்கத்து அம்மான் திரு**
**ஆரமார்வுஅது, அன்றோ! அடியேனை ஆட்கொண்டதே!"**

என்றருளிக் காட்டுவார்.

அப்பெருமானோடு தாம் ஒன்றிய நிலையை இவர்,

**"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்**
**உண்ட வாயன்என் உள்ளம் கவர்ந்தானை**
**அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக்**
**கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!"**

என்ற பாடலால் வெளிப்படுத்துவார்,

### பெருநிலை பெறுதல்

எம்பெருமான் திருப்பாணாழ்வாரை ஏற்று அருள் செய்ய, அவரும் மக்கள் பலர் காண அப்பெருமான் திருவடி மலர்களில் வீழ்ந்து வணங்கிப் பேரின்பப் பெருநிலை பெற்றார்.

திருப்பாணாழ்வாரைத் தம் தோள்களில் ஏற்றித் தம் முன் கொண்டு வந்த முனிவர் உலோக சாரங் கரையும் அரங்கநாதப் பெருமான் ஆட்கொண்டு அந்தமில் பேரின்ப வீட்டை அளித்தருளினார்.

இவ்வாழ்வார் பெருமான் இவ்வுலகில் ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்திருந்ததாகப் பெரியோர் கூறுவர்.

### பாடப்பெற்ற திருத்தலங்கள்

திருப்பாணாழ்வாரால் திருவரங்கம், திருவேங் கடம், பரமபதம் முதலிய திருத்தலங்கள் பாடப் பெற்றுள்ளன.

### வாழ்த்துப் பாடல்

உம்பர்தொழும் மெய்ஞ்ஞானத் துறையூரான் வாழியே
    உரோகிணிநாள் கார்த்திகையில் உதித்தவள்ளல் வாழியே
வம்பவிழ்தார் முனிதோளில் வந்தபிரான் வாழியே
    மலர்க்கண்ணை மற்றொன்றில் வையாதான் வாழியே
அம்புவியில் மதிளரங்கர் அகம்புகுந்தான் வாழியே
    அமலனாதிப் பிரான்பத்தும் அருளினான் வாழியே
செம்பொனடி முடியளவும் சேவிப்போன் வாழியே
    திருப்பாணன் பொற்பதங்கள் செகதலத்தில் வாழியே.

# 11. திருமங்கையாழ்வார்

"மேதக்க சோழவளநாடு சோறுடைத்து" என்று ஔவையாரால் போற்றிப் புகழப்பட்டது சோழவள நாடு. காவிரி பாயும் வளத்தாலும், கண்கவர் கலை வனப்பாலும், தெய்வத் திருத்தலங்களின் நிறைவாலும் நீண்ட நெடுங்காலமாய் இந்நாடு புகழோங்கி நின்றது.

இது பல உட்பிரிவுகளைக் கொண்டிருந்தது. இவற்றுள் ஒன்று திருவாலிநாடு என்பது. இந்நாட்டிலுள்ள பல ஊர்களில் திருக்குறையலூர் சீரோங்கப் பெற்றது. இவ்வூரில் அருங்குணங்களும் ஆற்றலும் நிரம்பிய ஆலிநாடர் என்பவர் சோழமன்னனின் படைத் தலைவராக அமர்ந்திருந்தார். இவரது மனைவியார் பண்புகள் மிக்க வல்லித்திரு என்னும் அம்மையார் ஆவர். இவர்களுக்கு நள ஆண்டு, கார்த்திகைத் திங்கள், பௌர்ணமியான வியாழக்கிழமை கார்த்திகை நட்சத்திரத்தில் சாரங்கம் என்னும் வில்லின் அம்சமாய் ஒரு மைந்தர் தோன்றினர். இவர் பிறவியிலேயே நீல நிறமாக இருந்தார். எனவே பெற்றோர்கள் இவருக்கு நீலன் என்ற பெயரிட்டு அரும் பெரும் சிறப்புடன் வளர்த்து வந்தனர்.

**வெற்றிச் சிறப்பும்**

**மன்னன் வரிசையும்**

இளம் பருவத்திலேயே இவர் கற்கவேண்டிய நூற்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்ருர். தம் குடும்பத்துக்குரிய படைக்கலப் பயிற்சியிலும் வல்லவராய் விளங்கினுர். சோழமன்னன் இவர் திறமை அறிந்து, இவரைத் தன் படைத் தலைவர்களில் ஒருவராக அமர்த்திக் கொண்டான்.

இவருக்குச் சோழமன்னனின் பகைவர்களோடு போராட வேண்டிய வாய்ப்புகள் ஏற்பட்டன. தம் திறமையாலும் வீரத்தாலும் இவர் அப்பகைவர்களை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்ருர். இவரது ஆற்றலையும் வீரத்தையும் மதிநுட்பத்தையும் கண்டறிந்த மன்னன் இவரிடம் மிக்க மதிப்பும் அன்பும் கொண்டு, ஆலிநாட்டுக்குத் திருமங்கை என்னும் ஊரைத் தலைநகராய் அமைத்து அதற்கு இவரை அரசராக்கிப் பெருமை செய்தான். தம் பராக்கிரமத்தால் நீலர் பகைவர்களுக்குக் காலனுக இருந்ததால் இவருக்குப் பரகாலன் என்ற சிறப்புப் பட்டமும் மன்னனுல் அளிக்கப்பட்டது.

பரகாலர் மக்கள் நலனே தம் நலனுகக் கருதி ஆட்சியைச் செவ்வனே நடத்தி வந்தார். கலைகளில் மிக்க ஈடுபாடு கொண்ட இவரை, இன்னிசைப் பாடலும் இனிய ஆடலும் மிகக் கவர்ந்திருந்தன. இக்கலைகளை அனுபவித்து மகிழ்தலையே இவர் தம் பொழுது போக்காகக் கொண்டிருந்தார்.

**வானுலக மங்கை**

பரகாலர் இவ்வாறு ஆட்சி நடத்தி வருகையில் சுமங்கலை என்னும் வானுலக மங்கை ஒருத்தி, தன் தோழியர்களுடன் இப்பூவுலகு வந்து, இமயமலையின் எழிலையும் வளத்தையும் சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்தாள். அங்கு ஒருபக்கம், திருமாலிடம் பக்தி கொண்ட கபிலமுனிவர் என்பவர் தம் சீடர்களுக்கு ஞானபோதனை செய்து கொண்டிருந்தார். இச்சீடர்களில் ஒருவர் விகாரவடிவம் கொண்டவர். இவரைக் கண்ட சுமங்கலை எள்ளி நகை செய்தாள். இதைப் பொறுக்க இயலாத கபிலமுனிவர் சினம் கொண்டவராக அவளைப் பார்த்து, "நீ இப்பூவுலகில் மானிடப் பெண்ணாகப் பிறந்து ஒருவனுக்கு மனைவியாகி அவனுடன் வாழ்ந்திடுவாய்" என்று சபித்தார்.

இதுகேட்ட சுமங்கலை பதறி நடுங்கியவளாய் முனிவரைப் பார்த்து, "தேவரீர், அடியாள் தெரியாது செய்த பிழையைப் பொறுத்து மன்னித்தருள வேண்டும்" என மன்றாடி வேண்டினாள்.

மனம் இரங்கிய முனிவர் அருள் கூர்ந்து அவளிடம், "பெண்ணே, நீ வருந்த வேண்டாம். என் சாபமும் நன்மையையே அளிக்கும். நீ சோழ நாட்டிலுள்ள பரகாலர் என்னும் மன்னர் மனைவியாகி, அவரது போர் செய்யும் வேட்கையையும் உலக வாழ்விலுள்ள இன்பப் பற்றினையும் நீக்கி, அவரைத் திருமால் அடியார் ஆக்கி, அவருடன் வாழ்ந்து, பின்னர் வானுலகு வந்து சேர்வாயாக!" என அருளினார்.

## குமுத மலரிடையே குழந்தை

சுமங்கலே தம் தோழியர்களுடன் திருவாலி நாட்டில் திருநாங்கூரிலுள்ள பொய்கையில் வந்து நீராடி விளேயாடிக் கொண்டிருந்தாள். குமுத மலர் அழகால் கவரப் பெற்று அதைக் கொய்து குதூகலித்தாள். தோழியர்கள் பொழுதானதை உணர்ந்து இவளே விட்டுப் பிரிந்து வானுலகு சென்றனர். தனித்து நின்ற சுமங்கலே திகைப்புற்றவளாய், குமுத மலர் ஒன்றைத் தன் தாயாகக் கொண்டு அதன் அருகே ஒரு குழந்தையாக ஒளி வீசினுள்.

திருமாலின் பக்தரான திருநாங்கூர் மருத்துவர் ஒருவர் இப்பொய்கையில் நீராடும் பொருட்டு வந்தார்.அவர் இக்குழந்தையைக் கண்டு சுற்றுமுற்றும் பார்க்கிருர். அங்கு யாருமே தென்படவில்லே. அவரிடம் வியப்பும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன. குழந்தைப் பேறு வாய்க்காத அவர் அக்குழவியை எடுத்து, இல்லம் சென்று தம் மனேவியிடம் ஒப்புவிக்கிருர். பெரு மகிழ்ச்சி கொண்ட அவள் குழந்தை இல்லாத தங்களுக்கு இறைவர் அளித்த பாக்கியம் என எண்ணிக் கொள்கிருள். கணவனும் மனேவியும் வாழ்வில் புதுநிலே கண்டனர். குமுதமலரின் அருகிருந்த அக்குழவி கிடைத்தமையால் அதற்குக் குமுதவல்லி என்னும் பெயரிட்டு அன்போடும் அருமையோடும் வளர்த்து வந்தனர்.

குமுதவல்லியும் வளர்ந்து திருமணத்துக்குரிய பருவத்தை அடைகிருள், உருவும் திருவும் உயர் பண்புகளும் நிறைந்த இந்த ஒப்பற்ற மங்கைக்கு ஏற்ற

மணவாளனை எவ்வாறு பெறுவது என்ற கவலையும் மருத்துவருக்கு ஏற்பட்டது.

**திருமங்கை மன்னருடன்**
**குமுதவல்லியின் திருமணம்**

இது இவ்வாறிருக்க மன்னர் பரகாலர் தம் தூதுவர்கள் மூலம் குமுதவல்லியின் குணச் சிறப்புகளையும் இணையில்லாப் பேரழகையும் கேள்விப்படுகிறார். அன்னத்திடமிருந்து தமயந்தியின் அற்புத அழகைக் கேள்விப்பட்ட நளன், அவள் மீது காதல் கொண்டு அவள் நினைவால் உருகியதுபோல் பரகாலரும் ஆனார்.

அவர் நேராக அம்மருத்துவர் இல்லம் வருகிறார். மன்னன் வரவு கண்ட மருத்துவர் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டு, அவரை அன்புடன் வரவேற்றுத் தக்கதோர் ஆசனத்தில் அமர வைத்தார். இருவரும் உரையாடிக் கொண்டிருக்கும் நேரம் தற்செயலாய் அங்கே வந்த குமுதவல்லியைப் பரகாலர் காண நேர்கிறது. அவரது காதல் அளவுகடந்து பெருகியது. அப்பெண்ணைத் தனக்கு மணம் செய்துதர வேண்டுமென மன்னன் மருத்துவரிடம் கேட்டுக் கொள்கிறான். அவரும் அதற்கு இசைகிறார்.

இச் செய்தியறிந்த குமுதவல்லி தன் தந்தையிடம், "திரு இலச்சினையும் திருநாமமுடைய ஒரு வைணவர்க்கேயன்றி மற்றவர்க்கு வாழ்க்கைப்படேன்" என்று கூறி விடுகிறாள்.

இதற்கு ஆலி நாடராகிய பரகாலரும் இசைந்து கொள்கிறார்.உடன்தானே அவர் திருநறையூர் சென்று

—7

அங்கு எழுந்தருளியுள்ள நம்பியாகிய எம்பெருமானை வணங்கி, அவர் அருளால் திருவிலச்சினைகள் பெற்று, திருமண் சூடி எம்பெருமான் திருத்தொண்டராய் குமுதவல்லியின் இல்லம் வந்தார். பரகாலரைக் கண்ட குமுதவல்லி மேலும் அவரிடம், "ஒரு ஆண்டுக் காலம் நீர் நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைணவர்களுக்கு அமுது செய்விக்க வேண்டும். அத்துடன் அவர்கள் திருவடி தீர்த்தத்தையும் தளிகைப் பிரசாதத்தையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். அப்படியானால் மட்டுமே நான் உம்மை என் கணவராக ஏற்றுக் கொள்வேன்" எனத் தெரிவித்தாள்.

குமுதவல்லி மீதுள்ள விருப்பப் பெருக்கால் இதற்கும் திருமங்கை மன்னர் இசைந்து கொள்கிறார். அவரால் உறுதிமொழியும் செய்து கொடுக்கப்படுகிறது. அவரை மணம் புரியக் குமுதவல்லியும் இசைகிறார். பின்பு நல்லதோர் நாளில், ஊரார் அனைவரும் பெரும் மகிழ்ச்சியில் திளைக்க, சான்றோரும் பெரியோரும் வாழ்த்திசைக்க, இருவருக்கும் திருமணம் சிறப்புடன் நடைபெற்றது.

குமுதவல்லியாரை வாழ்க்கைத் துணைவியாராகப் பெற்ற பின்னர் திருமங்கை மன்னர் நாள்தோறும் ஆயிரத்தெட்டு வைணவர்களுக்கு அன்னதானம் அளித்து வணங்கி வழிபட்டு வந்தார். இவ்வாறு நடைபெற்று வந்ததால் பரகாலர் செல்வம் முழுதும் கரைந்து போயிற்று. எனவே சோழ மன்னனுக்குக் கட்டவேண்டிய திறைப்பணம் கட்ட முடியாது போயிற்று.

### மன்னன் அனுப்பிய ஏவலாளர்கள்

சோழ மன்னன் பரகாலர் செயல் முறைகளைக் கேள்விப்படுகிறான். அவனுக்குச் சினம் மிகுந்து விடுகிறது. வரிப்பணம் வாங்கி வர அரச முத்திரை யுடன் தன் ஏவலாளர்களைத் திருமங்கை மன்னரிடம் அனுப்பி வைக்கிறான்.

சோழவேந்தன் ஏவலாளர்களை அன்புடன் வர வேற்றார் பரகாலர். ஆனால் அவரிடம் கொடுக்கப் பணம் ஏது? பணம் தருவதாகச் சொல்லி அவர்களைத் தங்க வைக்கிறார். எவ்வளவோ முயன்றும் அவரால் திறைப் பணம் கொடுக்க இயலவில்லை. நாட்கள் பல கழிகின்றன. ஏவலாளர்கள் அவரிடம் விரைவில் பணத்தைத் தந்து கொள்ளக் கடுமையான மொழி களால் வற்புறுத்தினர். பணம் கொடுக்க முடியாமை யின் காரணமாக அவரிடம் கோபம் மேலோங்கு கிறது. ஏவலாளர்களை அடித்துத் துரத்தி விடுகிறார். அவர்கள் சோழ மன்னரிடம் வந்து நடந்த நிகழ்ச் சிகளைக் கூறுகிறார்கள்.

### மன்னன் படைகள்

தனது கட்டளையைப் பரகாலர் நிறைவேற்றாது, தூதுவர்களையும் விரட்டி அனுப்பியது சோழவேந் தனைக் கடுஞ்சினம் கொள்ள வைத்தது. அவன் தனது படைத்தலைவனை அழைத்து, "நீ படையுடன் போய் பரகாலனைச் சிறைப்பிடித்து வா" என்று கட்டளையிட் டான். அவனும் வேண்டிய படைகளைத் திரட்டிக் கொண்டு வந்து பரகாலரை வளைத்துப் பிடிக்க முயன்

ரூன். பரகாலர் தமது ஆடல்மா என்னும் குதிரை மேலேறி, தம் படைகளுடன் சோழன் படை முன்னே வந்து வீரமாகச் சமர்புரிந்தார். அவரது தாக்கு தலுக்காற்ருத சோழன் படைகள் சிதறுண்டு ஓடின. படைத்தலைவனும் பரகாலர் பராக்கிரமத்தின் முன் நிற்க இயலாது புறமுதுகிட்டோடினுன். நேராக அவன் அரசனிடம் சென்று தங்களுக்கேற்பட்ட விபரீத நிலையை அறிவிக்கிருன்.

**சோழன் தாக்குதலும்**
**பரகாலர் பராக்கிரமும்**

இச்செய்தி கேட்ட சோழ வேந்தன் முகம் சீற்றத் தால் சிவந்தது. உதடுகள் துடித்தன. பரகாலரை எதிர்த்துப் பிடிக்க அவன் தன் படைகளைத் திரட்டிக் கொண்டு புறப்பட்டான். இருபக்கமும் கடும்போர் நிகழ்ந்தது. சோழன் பரகாலரைப் பிடிக்கத் தன் வீரர் களுக்குக் கட்டளையிட்டான். போர்த் திறமை மிக்க பரகாலரின் பக்கம் யாரே நெருங்க வல்லார்? அவரது தாக்குதலுக்கு ஆற்ருத சோழன் படைகள் சின்னுபின் னப்பட்டுச் சிதறின. அவர்களையெல்லாம் தடுத்து நிறுத்திய சோழ வேந்தன் பரகாலரைத் தன் படை யின் நடுவே சிக்கவைத்தான்.

வீரம் கிளர்ந்து பொங்கிய பரகாலர் சிங்க ஏறெனச் சோழன் படையினரைத் தாக்கித் தம் கை வாளால் அழித்துக் கொண்டிருந்தார். தன் ஆற்றல் பரகாலரிடம் செல்லாது என்பதைத் தெரிந்து கொண்ட சோழன் அவரிடம், "பரகாலரே, உமது வீரத்தினைக் கண்டு நான் மிகவும் மகிழ்கின்றேன்.

நான் உமக்குச் செய்திருக்கும் நலன்களை எண்ணிப் பாராது என்னோடு போர் செய்ய வந்தீர். இது உம்போன்றவர்க்கு அழகா?'' என்று வினவினான்.

சோழன் மொழிகளைக் கேட்ட திருமங்கை மன்னர் மனம் வருந்தினார். 'நன்றி மறப்பது நன்றல்ல' அல்லவா? அவர் சோழனிடம், ''நான் நன்றி மறக்க வில்லை. எனது நிலைமை தெரிந்திருந்தும் உமது ஏவ லாளர் எம்மிடம் நெறி தவறி நடந்ததாலேயே நாம் அவ்வாறு செயல் பட நேர்ந்தது'' எனத் தெரி வித்தார்.

பின்னர் மன்னன் பரகாலரிடம், ''நீர் நமக்குத் தரவேண்டிய வரிப்பணத்தைத் தந்தேயாக வேண்டும். விரைவில் அதைச் செலுத்தி விடும். அதுவரையிலும் நீர் நமது அமைச்சர்களின் பாதுகாப்பில் இருக்க வேண்டும்'' எனக் கட்டளையிட்டான். பரகாலரும் இதற்கு இசைந்து கொள்கிறார்.

**சிறைவாசமும் பட்டினியும்**

அரசன் கட்டளைப்படி அமைச்சர்கள் பரகாலரை ஒரு திருக்கோயிலில் சிறை வைத்தார்கள். அங்கு அவர் பட்டினியாகக் கிடந்தார். நீலமேனி நெடி யோனை நெஞ்சத்தில் எண்ணி அவர், ''எம்பெரு மானே, உன் அடியார்களுக்கு அமுதளித்த தொண்டில் என் செல்வமெலாம் தீர்ந்தது, சோழமன்னருக்கு வரிப்பணம் கட்ட வழியில்லாது இப்போது தவிக்கின் றேன். அருள்கூர்ந்து என்மீது கருணை காட்டுக!'' என வேண்டினார்.

**கனவில் அனந்தசயனர்**

எம்பெருமான் மங்கை மன்னரிடம் கருணை கொண்டார். அவர் கனவில் தோன்றி, ''உமக்கு

வேண்டிய பொருள் தருகிறோம். காஞ்சிபுரத்திற்கு வருக!'' எனத் திருவாய் மலர்ந்தருளினார். எம்பெருமான் அருட்கனிவை எண்ணி வியப்பும் களிப்பும் கொண்டார் பரகாலர்.

மறுநாள் அவர் சோழன் அமைச்சர்களிடம், ''காஞ்சிபுரத்தில் பணம் உள்ளது. அங்கு வந்தால் உங்களுக்குத் தரவேண்டிய வரிப்பணத்தைத் தருகிறேன்'' எனக் கூறினார்.

அமைச்சர்கள் அரசனிடம் இச்செய்தியைத் தெரிவித்து இசைவு பெற்றனர். அவர்கள் தக்க பாதுகாப்புக் காவலுடன் பரகாலரைக் காஞ்சிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு இவர் நிதியைத் தேடியும் கிடைக்கவில்லை. தமது வாக்குப் பொய்த்துவிட்டதே என அவர் கவலைகொள்கிறார். இந்நிலையில் அருட் பெருங்கடலான வரதராசப் பெருமான் மீண்டும் இவர் கனவில் தோன்றி, ''பரகாலா, கவலை கொள்ள வேண்டாம். வேகவதி நதிக்கரையில் நிதியுள்ளது. அங்குச் சென்று எடுத்துக் கொள்க!'' என்று அடையாளம் காட்டியருளினார். தெளிவும் திடமும் கொண்ட திருமங்கை மன்னர் குறிப்பிட்ட அவ்விடம் சென்று நிதியைக் கண்டெடுத்தார். அந்நிதியிலிருந்து சோழ மன்னனுக்குக் கொடுக்க வேண்டும் வரிப் பணத்தை அமைச்சர்களிடம் கொடுத்தனுப்பினார். மீதியைப் பக்தர்களுக்கு உணவளிக்க வைத்துக் கொண்டார்.

**மன்னன் கழிவிரக்கம்**

பரகாலர் கொடுத்த திறைப்பணத்தைப் பெற்றுக் கொண்ட அமைச்சர்கள், நேராக அரசன் மாளிகைக்குச் சென்றனர். அங்கு மன்னனை வணங்கி அவன்

முன்னே அப்பணத்தை வைத்து அவர்கள், பரகால ருக்கு வேகவதி நதிக்கரையில் வரதராசப் பெருமான் அருளால் அது கிடைத்த விவரத்தை அறிவிக் கின்றனர். இது கேட்ட மன்னன் வியப்பும் அச்சமும் கொள்கிறுன். பரகாலர் தெய்வ அருள் பெற்றவர் என்பதை அவன் அப்போது நன்கு தெரிந்து கொண் டான். அவரைச் சிறையில் வைத்ததற்கும் அவருக்கு உணவளிக்காத செயலுக்கும் மிக வருந்திஞன். இதற்குக் கழுவாய் தேடிக்கொள்ள விரும்பிய சோழன் பரகாலர் கொடுத்தனுப்பிய திறைப்பணத்தைப் பெற்றுக் கொள்ளாது அவரை அழைத்து அதை அவரிடமே ஒப்புவித்து வணங்கிஞன். மேலும் பல அன்பளிப்புகள் அரசஞல் அவருக்கு அளிக்கப்பட்டன. அவைகளே அவன் இறைப்பணிக்குப் பயன்படுத்திக் கொள்ள அவரை வேண்டிக் கொண்டான்.

**வழிப்பறிக் கொள்ளே**

இந்நிதியினேக் கொண்டு திருமங்கை மன்னர் முகுந்தப் பெருமான் அடியார்களுக்கு உணவளித்துத் தம் திருத் தொண்டைச் செய்து வந்தார். இந்நிதியும் எத்தனே நாட்களுக்கு ஆகும்! தம் இறைப்பணிக்குப் பணம் இல்லாத வறிய நிலே விரைவில் அவருக்கு ஏற் பட்டது. என்ன செய்வதெனச் சிந்தித்தார். வழி யெதுவும் அவருக்குப் புலப்படவில்லே. இறுதியில் வழிப்பறி செய்தேனும் தம் தொண்டைத் தட்டின்றி நிறைவேற்ற முடிவு செய்தார்.

பின்னர் அவர் தம் ஆட்களேத் துணையாகக் கொண்டு திருமணங்கொல்லேயில் அரசமரம் ஒன்றின் அடியமர்ந்து வழிப்பறிக் கொள்ளேயில் ஈடுபட்டார். வழிப்பயணம் செய்வோர் கொண்டு செல்லும் பணத்

தைச் சூறையாடித் தம் திருத்தொண்டைச் செவ்வனே செய்து கொண்டிருந்தார். இவ்வாறு நாட்கள் கழிந்து வந்தன.

**இறைவன் திருவருள்**

இத்தீச் செயலிலிருந்து இவரைத் தடுத்தாட்கொள்ள இறைவர் திருவுளம் கொண்டார். எம்பெருமான் தம் தேவியாருடன் அணிகலன்கள் பல அணிந்து, மணமக்கள் கோலத்தில் நிறைய நிதிச் செல்வங்களோடு பரகாலர் தங்கியிருந்த வழியாக வந்துகொண்டிருந்தார். இவர்களைக் கண்ட பரகாலருக்கு மகிழ்ச்சி ஊற்றெடுக்கிறது. தம் திருத்தொண்டுக்கு அன்று நிறைய நிதி சூறையாடிப் பெறலாம் என்ற எண்ணந்தான் இதற்குக் காரணம். ஆயுதங்கள் ஏந்திய தம் கொள்ளைக் கூட்டத்தாருடன் இவர் வந்தவர்களை வழி மறித்து அவர்களது ஆடைகள், அணிகலன்களையெல்லாம் கவர்ந்து கொள்கிறார். மணமகன் அணிந்திருந்த மோதிரம் ஒன்றைக் கழற்ற முடியவில்லை. தம் பற்களால் அதைக் கழற்றிக் கொண்டார். இதைப் பார்த்து எம்பெருமான், இவரை 'நம் கலியன்' என்று அருளினார்.

திருமணக் குழுவினரிடமிருந்து பரகாலரால் கவர்ந்து கொள்ளப்பட்ட பொருள்களெல்லாம் சுமையாகக் கட்டப்பட்டன. பரகாலர் ஆட்கள் அச்சுமையைத் தூக்க முனைந்தனர். ஆனால் அவர்களால் அதை அசைக்கவே இயலவில்லை. அவர் முயன்று பார்த்தார். அவராலும் அது முடியவில்லை. வியப்பும் கோபமும் கொண்ட பரகாலர் மணக்கோலம் கொண்டிருந்த திருமகள் நாதரைப் பார்த்து "நீ ஏதோ மந்திர வித்தை செய்திருக்கிறாய்! சொல்லி விடு,

இல்லாவிட்டால் உன்னை என் கைவாளுக்கு இரை யாக்குவேன்'' என்று கூறினார்.

எம்பெருமான் புன்னகை இழைத்தவராய் பர காலரிடம், ''அம்மந்திரத்தை உமக்கும் சொல்கிறோம். அருகில் வாரும்'' என அழைத்து அவர் தம் வலது செவி யில் வேத சாரமான திருவெட்டெழுத்து மந்திரத்தை உபதேசித்து அருளினார். உடனே வைகுந்தப் பெரு மான் பிராட்டியாருடன் கருடாழ்வார்மீது தோன்றித் திருக்காட்சி அளித்தார்.

அருட்பெருங் கடலாகிய எம்பெருமான் பிராட்டி யாருடன் அளித்த திருக்காட்சியில் விம்மிதப் பேரா னாந்தம் அடைந்த திருமங்கை மன்னர் அஞ்ஞான இருளகன்று மெய்ஞ்ஞான ஒளிபெற்றார். தத்துவ ஞானமும் வித்தகப் பெருக்கும் அவரை அணைந்தன. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவி களையும் வருந்தாமல் திருந்த அருளும் வாக்குவன்மை பெற்றார். எனவே இவர் நாற்கவிப் பெருமாள் என்றும் அழைக்கப்படலானார்.

**''வாடினேன்; வாடி வருந்தினேன் மனத்தால்**
**பெருந்துயர் இடும்பையில் பிறந்து**
**கூடினேன்; கூடி இளையவர் தம்மோடு**
**அவர்தரும் கலவியே கருதி**
**ஓடினேன்; ஓடி, உய்வது ஒருபொருளால்**
**உணர்வுஎனும் பெரும்பதம் திரிந்து**
**நாடினேன்; நாடி நான் கண்டுகொண்டேன்**
**நாராயணா என்னும் நாமம்''**

என்று தொடங்கும் பெரிய திருமொழிப் பாசுரங் களைப் பாடி மக்கள் உய்யும் வழியைக் காட்டினார். இப் பாசுரங்கள் நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு

வேதங்களின் சாரமான நான்கு திவ்யபிரபந்தங்களுக்கும் ஆறு அங்கங்களாக அமைந்தன.

**அருளிய பிரபந்தங்கள்**

ஞானப் பெருக்குணர்வில் இவர் பெரியதிருமொழி திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரியதிருமடல் என்னும் ஆறு பிரபந்தங்களை அருளிச் செய்தார்.

பெரிய திருமொழியில் பதினொன்று பத்துக்கள் அடங்கியுள்ளன. பதினொன்றும் பத்துமட்டும் எட்டு திருமொழிகள் கொண்டது. எனவே இதிலுள்ள திருமொழிகள் 108 ஆகும். பெரிய திருமொழியின் மொத்தப் பாசுரத்தொகை 1084 ஆகும். திருக்குறுந்தாண்டகம் இருபது பாசுரங்களையும் திருநெடுந்தாண்டகம் முப்பது பாசுரங்களையும் கொண்டவை. திருக்குறுந்தாண்டகத்தை இவர்மட்டுமே பாடியிருப்பதாக அறிஞர்கள் கூறுவர்.

**தலயாத்திரை**

இவர் பெரிய திருமொழி பாடும் காலத்தில் நாடுகள்தோறும் சென்று அங்கங்கே கோயில் கொண்டுள்ள பெருமாள்களை மங்களாசாசனம் செய்து திருப்பதிகங்கள் பாடிவரலானார். முதலில் வடதிசை நோக்கிச் சென்று இமயமலை சென்றணைந்தார். அங்குள்ள திருப்பிரீதி என்ற திருத்தலம் சென்று இறைவரை வழிபட்டுப் பாசுரங்கள் பாடினார். பின்னர் பதரிகாச்சிரமம், சாளக்கிராமம், நைமிசாரணியம், சிங்கவேள் குன்றம், திருவேங்கடம் என்னும் திருப்பதிகள் வந்து அங்குள்ள பெருமாள்களை வணங்கிப் பாசுரங்கள் பாடினார். பின்பு தொண்டைநாடு வந்து, திருவெவ்வளூர் (திருவள்ளூர்)

திருவல்லிக்கேணி, திருநீர்மலை ஆகிய திருப்பதிகள் சென்று இறைவரைப் பாசுரங்கள் பாடிப் பரவினர். பின் திருக்கடல்மல்லை சென்று அங்குக் கோயில் கொண்டுள்ள பெருமானை,

**''பார்-ஆயது உண்டுஉமிழ்ந்த பவளத் தூணை,**
**படுகடலில் அமுதத்தை. பரிவாய் கீண்ட**
**சீரானை, எம்மானை, தொண்டர் தங்கள்**
**சிந்தையுள்ளே முளைத்து எழுந்த தீ்ங்கரும்பினை**
**போர் ஆனைக் கொம்புஒசித்த போர்ஏற்றினை**
**புணர்மருதம் இறநடந்த பொன்குன்றினை**
**கார் ஆனை இடர்கடிந்த கற்பகத்தைக்**
**கண்டதுநான்—கடல்மல்லைத் தலசயனத்தே!**

என்று தொடங்கும் பாசுரங்களைப் பாடித் தொழுதார். மேலும் சில தொண்டைநாட்டுத் திருப்பதிகளுக்குச் சென்று இறைவரை வழிபட்டு நடுநாடு சென்று அங்குள்ள திருப்பதிகளை வணங்கினர். பின்னர் சோழநாடு சென்று அங்குள்ள திருச்சித்திரகூடம் இறைவரைத் தொழுது சீர்காழி வந்து கொண்டிருந்தார்.

### திருஞான சம்பந்தருடன் திருமங்கை மன்னர்

அவ்வாறு வரும்போது திருமங்கையாழ்வார் சீடர்கள், ''நாற்கவிப் பெருமாள் வந்தார், நம் கலியன் வந்தார், ஆலி நாடர் வந்தார், அருள்மாரி வந்தார், பரகாலர் வந்தார், நீலநிறத்தார் வந்தார்'' போன்ற விருதுகளைக் கூறி வாழ்த்திக்கொண்டு வந்தனர். அங்கிருந்து கொண்டிருக்கும் சமயக்குரவர்கள் நால்வருள் ஒருவரும், சீர்காழிச் செல்வரும் ஞானப்பால் உண்டு அற்புதங்களை விளைவித்துக்

கொண்டிருப்பவருமாகிய திருஞான சம்பந்தப் பெருமானின் அடியார்கள் இவர்கள் பக்கம் வந்து, "எங்கள் ஞானசம்பந்தப் பெருமான் வீற்றிருக்கும் இங்கே நீங்கள் விருது முழக்கிச் செல்லுதல் கூடாது" என்று விலக்கினார்கள்.

இதையறிந்த திருமங்கையாழ்வார் ஞானசம் பந்தப் பெருமானைக் காணச் சென்றனர். காழி வள்ளல் அவரை அன்புடன் வரவேற்றுத் தக்கதோர் ஆசனத்தில் அமரவைத்தார். இருவரும் தத்துவப் பொருள்கள் குறித்து உரையாடினார்கள். சைவநாய ஞர் ஆழ்வாரிடம், "உம் கவித்திறத்தை யாம் தெரியப் பாடல் பாடுவீராக" என்று சொல்லவும் திருமங்கை யாழ்வார், சீர்காழி விண்ணகரத் திருப்பதியில் வீற்றிருக்கும் தாடாளப் பெருமானை,

**"ஒருகுறள் ஆய் இருநிலம் மூவடி மண்வேண்டி**
**உலகு அனைத்தும் ஈர் அடியால் ஒடுக்கி ஒன்றும்**
**தருகஎனா மாவலியைச் சிறையில் வைத்த**
**தாடாளன் தாள்அணைவீர் தக்ககீர்த்தி**
**அருமறையின் திரள் நான்கும் வேள்வி ஐந்தும்**
**அங்கங்கள் - அவை ஆறும், இசைகள் ஏழும்**
**தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்**
**சீராம விண்ணகரே சேர்மின் நீரே!**

என்று தொடங்கும் பதிகத்தைப் பாடினார். கேட்ட ஞான சம்பந்தப் பெருமான் திருமங்கையாழ்வார் அருள் திறனைப் பாராட்டிப் போற்றினார். அங்கு அவரது சீடர்கள் விருதுகள் கூறிச் செல்ல இசை வளித்து அன்புடன் விடை கொடுத்தனுப்பினார்.

## திருப்பணிகள் செய்தல்

பின்பு திருமங்கையாழ்வார் பல திருப்பதிகள் சென்று இறைவனை வணங்கி திருமொழிகள் பாடி திருவரங்கம் வந்து சேர்ந்தார். இறையருளின் தூண்டுதலால் இங்குள்ள கோயிலுக்கு விமானம், மண்டபம், திருத்தளிகை, கோபுரம், திருமதில் ஆகியவற்றை அமைக்க விரும்பினார். ஆனால் இப்பணிகளுக்கு நிறையப் பணம் வேண்டுமே! என் செய்வது என இவர் மலைப்புக் கொண்டார். தம் அமைச்சர்களை அழைத்து, இப்பணிகளுக்கு எவ்வாறு நிதி திரட்டுவது என்பதைக் குறித்து ஆலோசித்தார்.

அமைச்சர்கள் ஆழ்வாரிடம், "பெருமானே, நாகப்பட்டினத்தில் ஒரு புத்த விகாரத்தில் பொன்னால் செய்த புத்தர் உருவம் ஒன்றுள்ளது. அதைக் கவர்ந்து கொண்டு வந்தால் போதும். இப் பணிகள் அனைத்தும் தட்டின்றி நிறைவேறும்," என்று கூறி வழி தெரிவித்தார்கள்.

அமைச்சர்கள் தெரிவித்த யோசனை திருமங்கையாழ்வாருக்கும் சிறந்ததாகவே பட்டது. அவரிடமிருந்த கவலை நீங்கி, முகத்தில் மகிழ்ச்சி மலர்ந்தது. தம் ஆட்களுடன் ஆழ்வார் நாகப்பட்டினம் சென்று அப்புத்தர் சிலையைக் கவர்ந்து கொண்டுவந்தார். அதை உருக்கி, அப்பொன்னை விலைப்படுத்தி அப் பொருளைக் கொண்டு திருப்பணிகளைத்தொடங்கினார். மதில் கட்டும் பொழுது தொண்டரடிப் பொடியாழ்வார் பெருமாளுக்குத் திருமாலை சேர்க்கின்ற இடம் நேர்பட அதை ஒதுக்கிக் கட்டுவித்தார். இதையறிந்த தொண்டரடிப் பொடியாழ்வார் தம் மலர் பறிக்கும் ஆயுதத்திற்கு திருமங்கை மன்னர் பெயர்களுள்

ஒன்றுன அருள்மாரி என்னும் பெயரை இட்டுத் தம் நன்றியுணர்வையும் மகிழ்வையும் தெரிவித்துக்கொண்டார். இக்கோவிலுள்ள பிரகார மதில்களில் இவர் கட்டிய மதிலே மிகப்பெரியது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பின்னர் திருமங்கையாழ்வார் மேலும் பலத் திருத்தலங்கள் சென்று அங்கெல்லாம் கோயில்கொண்டுள்ள பெருமாளே சேவித்து, அருள்மொழிப் பாசுரங்கள் பாடி மக்கள் உயர்வு பெற வழிகாட்டினர்.

எம்பெருமாளே மனத்திலிருத்தி சேவித்து வந்த இவர் அப்பெருமானின் அருளேத் தம்மேல் ஏற்றிக் கூறும் தன்மை வியத்தற்குரியது. எம்பெருமாளும் இவ்வடியார் துதியில் உளமுவந்து அருள் சுரந்தார்.

**செங்கமலத்து அயன்அனைய மறையோர் காழிச்**
**சீராம விண்ணகர்என் செங்கண் மாலே**
**அம்கமலத் தடவயல்சூழ் ஆலி நாடன்**
**அருள்மாரி, அரட்டுஅமுக்கி, அடையார் சீயம்**
**கொங்குமலர்க் குழலியர்வேள், மங்கை வேந்தன்**
**கொற்றவேல் பரகாலன், கலியன் சொன்ன**
**சங்கமுகத் தமிழ்மாலே பத்தும் வல்லார்**
**தடங்கடல்சூழ் உலகுக்குத் தலேவர் தாமே!**

இப்பாசுரத்தில் திருமங்கையாழ்வார் தமது பெயர்களில் சிலவற்றைக் குறிப்பிடுதல் அறியத்தக்கதாகும்.

### பாடப்பெற்ற திருத்தலங்கள்

இவரால் பாடப்பெற்ற திருத்தலங்கள் : திருப்பிரிதி, திருவதரி, திருச்சாலிக்கிராமம் நைமிசாரணியம், சிங்கவேழ்குன்றம், திருவேங்கடம், திருஎவ்வுளூர் (திருவள்ளூர்) திருவல்லிக்கேணி, திரு நீர்மலே, திருக்கடல்மல்லே, திருவிடவெந்தை, திருவட்டபுய

கரம், திருப்பரமேச்சுர விண்ணகரம், திருக்கோவலூர், திருவயிந்திரபுரம், தில்லைத் திருச்சித்திரகூடம், திருக்காழிச் சீராம விண்ணகரம் திருவாலி, திருநாங்கூர், திருவிந்தளூர், திருவெள்ளியங்குடி, திருபுள்ளம் பூதங்குடி திருக்கூடலூர்,திருவெள்ளறை, திருவரங்கம்,திருப்பேர் நகர், திருநந்திபுர விண்ணகரம், திருவிண்ணகர், திருநறையூர், திருச்சேறை, திருவழுந்தூர், சிறுபுலியூர்ச்சலசயனம், திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, திருநாகை, திருப்புல்லாணி, திருக்குறுங்குடி, திருவல்லவாழ், திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர் ஆகியவையாகும்.

### வாழ்த்துப் பாடல்

**கலந்ததிருக் கார்த்திகையில் கார்த்திகை வந்தோன் வாழியே**
**காசினியிற் குறையலூர்க் காவலோன் வாழியே**
**நலந்திகழா யிரத்தெண்பத்து நாலுரைத்தான் வாழியே**
**நாலைந்தும் ஆறைந்தும் நமக்குரைத்தான் வாழியே**
**இலங்கைழுகூற் றிருக்கையிரு மடலீந்தான் வாழியே**
**இம்முன்றில் இருநூற்றிருபத் தேழீந்தான் வாழியே**
**வலந்திகழும் குமுதவல்லி மணவாளன் வாழியே**
**வாட்கலியன் பரகாலன் மங்கையர்கோன் வாழியே!**

# 12. மதுரகவியாழ்வார்

சங்கம் கண்டு தமிழ் வளர்த்த தெய்வத் திருநாடு பாண்டிநாடு. இங்குள்ள தெய்வத் திருப்பதிகளில் திருக்கோளூர் சிறப்பு மிக்கது. இங்குள்ள மக்கள் கல்விப் பெருக்கமும், நல்லொழுக்கமும் தெய்வபக்தி யும் கொண்டவர்கள். இத்தகைய சிறப்பு மிக்க திருவூரில், அந்தணர் மரபில், துவாபரயுகம் ஈசுவர ஆண்டு, சித்திரைத் திங்கள் சுக்கில சதுர்த்தசி திதியில் வெள்ளிக்கிழமை சித்திரை நட்சத்திரத்தில் மதுரகவி யாழ்வார் அவதரித்தார்.

## இளமையில் புலமை

சின்னஞ்சிறு பருவத்திலேயே இவருக்குக் கல்வியில் மிக்க ஆர்வம் இருந்தது. தமிழ்மொழி, வடமொழி ஆகிய இரண்டையும் ஐயமறக் கற்றுப் பெரும்புலமை பெற்ருர். நான்மறைகளேயும் அவற்றின் அங்கங்களே யும் தெளிவுறப் பயின்றதோடு புராண இதிகாசங்களே யும் நன்கு கற்றுத் தத்துவ ஞானம் பெற்ருர். கரு விலேயே இவர் புலமைத் திருவோடு பிறந்தவராத லால் இனிய கவிதைகள் பாடுவதிலும் வல்லவராய் விளங்கினுர். எனவே மதுரகவி என்னும் திருநாமம் இவருக்கு உரியதாயிற்று.

## திருத்தலப் பயணம்

இவருக்கிருந்த மெய்யுணர்வின் காரணமாக இவர், பாம்பணையில் பள்ளிகொள்ளும் பரந்தாமனிடம் மிகுந்த பக்தியுடையராய் இருந்தார். எந்நேரமும் அப்பெருமானையே இதயத்தில் எண்ணி, இவ்வுலக வாழ்விலுள்ள ஆசைகளை நீக்கினர். எம்பெருமானைச் சேவித்து, உய்வுபெறும் எண்ணத்தோடு இவர் தீர்த்த யாத்திரையை மேற்கொண்டார். அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னும் ஏழு திருத்தலங்களுக்கும் சென்று இறைவரை வணங்கி மீண்டும் அயோத்தி வந்தார். அங்குப் படிம வடிவில் எழுந்தருளியுள்ள இராமபிரானையும் சீதாபிராட்டியாரையும் வணங்கி, அங்கேயே நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தார்.

## பேரொளியைக் கண்டு செல்லுதல்

இந்நாட்களில் ஒருநாள் இரவு அவருக்குத் தாம் பிறந்த திருக்கோளூரில் வீற்றிருக்கும் பெருமாளைத் தொழும் எண்ணம் எழுந்தது. தென்திசையை நோக்கி அவர் தொழும்போது அப்பக்கமாய் வானேங்கி வளர்ந்த ஒரு திவ்வியப் பேரொளியைக் காணுகிருர். இதைக் கண்ட அவரிடம் அளவுகடந்த வியப்பு மேலோங்குகிறது. 'இவ்வொளி எங்குள்ளது? எதனுல் ஏற்பட்டது?' என்பதைத் தெரிந்து கொள்ள அவரிடம் ஆர்வம் பொங்குகிறது. அவர் அவ்வொளியை நோக்கியபடியே பயணத்தைத் தொடங்கினர். இரவு முழுதும் அவ்வொளியை நோக்கி நடப்பதும் கதிரவன் உதயமானதும் அந்த இடத்தில் தங்குவதும் மீண்டும்

இரவு அவ்வொளியை நோக்கிச் செல்வதுமாக நாட்கள் கழிகின்றன. இவ்வாறு மதுரகவியார் நெடுவழி நடந்து ஆழ்வார் திருநகரியை அடைந்தார். அவ்வொளி அங்குள்ள பெருமாள் திருவாலயத்துள் புகுந்து மறைந்தது.

### நம்மாழ்வார் திருக்காட்சி

மதுரகவியார் அங்குள்ளவர்களிடம் அவ்வொளியைப்பற்றிக் கேட்க, அவர்கள் அது, சடகோபர் திருமேனியிலிருந்து வெளிப்படும் ஒளியே எனத் தெரிவித்தார்கள். வியப்பும் பெருமகிழ்வும் கொண்ட மதுரகவியார், தியானத்தில் ஆழ்ந்துள்ள நம்மாழ்வார் பக்கம் சென்று அவரைச் சேவித்து சிந்தை மலர்ந்தார். ஆழ்வார் முகத்திலிருந்து வீசிய அருளொளி மதுரகவியாரைப் பெரிதும் ஈர்த்தது.

நம்மாழ்வாரின் அருள் தமக்குக் கிடைக்குமா என்பதைச் சோதித்து அறிய மதுரகவியார் விரும்புகிருர். இந்நோக்கத்தோடு இவர், நம்மாழ்வார் பக்கம் வந்து இரு கைகளேயும் நன்கு தட்டி ஓசை எழுப்புகிருர். பின்னர் ஒரு கல்லே எடுத்துப் போடுகிருர். இவ்வோசைகளேக் கேட்ட நம்மாழ்வார் கண்திறந்து பார்த்தார். இதைக்கண்டு உள்ளம் சிலிர்த்து உவகை கொண்ட மதுரகவியார், ''செத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'' எனக் கேட்டார். இதன் பொருள், இயற்கையில் உருவாகும் உயிரில்லாத இவ்வுடம்பில் உயிர் தோன்றிஞல் அது எதை அனுபவித்துக் கொண்டு இவ்வுலகில் கிடக்கும் என்பதாகும்.

மதுரகவியார் கேட்ட இக்கேள்விக்குப் பதிலாக நம்மாழ்வார், ''இறையுணர்வு கொண்ட உயிராக இருந்தால் எம்பெருமானிடம் ஈடுபாடு கொண்டு அவனிடமே தோய்ந்து கிடக்கும். அவ்வாறு இறை யுணர்வு பெருத ஆத்மாவாக இருந்தால் ஐம்புல வேட்கைகளில் ஈடுபட்டு நல்வினை தீவினைகளை அனுப வித்து இவ்வுலக மாயப்பிறவிகளிலேயே அமிழ்ந்து கிடக்கும்'' என்னும் பொருள்பட, ''அத்தைத்தின்று அங்கே கிடக்கும்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

**ஆழ்வாரிடம் சரண்**

இவ்விளக்கம் கேட்ட மதுரகவியார் தமக்கு உய் வளிக்கவே நம்மாழ்வார் பெருமானிடமிருந்து தோன்றிய பேரொளி, தம்மை ஈர்த்து அவர் பக்கம் கொண்டு சேர்த்திருக்கிறது என்பதை உணர்ந்தார். அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அவரையே தமது ஞானப்பெருமானுகக் கொண்டு அவரிடம் அடைக்கலமானர். ஆழ்வார் பெருமானும் இவரை ஏற்றுக்கொண்டார்.

வேதங்களின் சாரமாகப் பிரபந்தங்களை அருளிச் செய்த நம்மாழ்வார் அவைகளை மதுரகவியாருக்கு உபதேசித்தருளினர். அவரும் அவைகளைப் பட்டோலை யில் எழுதினர். இப்பாசுரங்களில் மிக்க ஈடுபாடு கொண்ட இவர், இவைகளை மக்கள் ஞான ஒளிபெற எங்கும் பரப்பினர்.

மதுரகவியார் தமக்கு ஞானம் அளித்த பெரு மானை நாளும் சேவித்து மனம் உருகுவார். ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் அவர் பாசுரங்களைப் பாடிப் பாடி பரவசநிலை பெறுவார். அவரே தாம்

வழிபடும் தெய்வம் எனக் கருதினர். ஆண்டவனை வழி படுவதும் அவன் அடியார்களை வழிபடுவதும் ஒன்றே யன்ரே! எனவே மதுரகவியாழ்வார் மற்ற ஆழ்வார் களைப்போல் பரந்தாமனைப் பாடாது நம்மாழ்வாரைப் பாடுவதிலேயே பரந்தாமன் அருள்பாலிக்கும் என்ற உணர்வோடு நம்மாழ்வார்மீது பதினெரு பாசுரங் களைக் கொண்ட பாமாலை ஒன்றைப் பாடியருளினர். அதன் முதற்பாடல், 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்று தொடங்குவதால் அப்பாமாலைக்குக் 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்று பெயராயிற்று. பாசுரங்கள் உருக்கம் மிக்கவையாய் அமைந்துள்ளன. இப்பாசுரங் களில் மூன்று அடியில் வருவன :

**கண்ணிநுண் சிறுத்தாம்பினுல் கட்டு உண்ணப்**
**பண்ணிய பெருமாயன் என் அப்பனில்**
**நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்**
**அண்ணிக்கும் அமுதுஊறும் என்நாவுக்கே.**

**நாவினுல் நவிற்று இன்பம் எய்தினேன்**
**மேவினேன் அவன் பொன்னடி, மெய்ம்மையே;**
**தேவுமற்று அறியேன்; குருகூர் நம்பி**
**பாவின் இன்னிசை பாடித் திரிவனே.**

**திரிதந்து ஆகிலும் தேவபிரான் உடைக்**
**கரிய கோலத் திருவுருக் காண்பன் நான்;**
**பெரிய வண்குருகூர் நகர்நம்பிக்கு ஆள்**
**உரியனுய் அடியேன் பெற்ற நன்மையே!**

ஏனைய பாசுரங்களும் இவ்வாறு மதுரித்து உளத் தையும் உயிரையும் கனிய வைப்பன.

### அர்ச்சக வழிபாடு

பிற்காலம் மதுரகவியார் நம்மாழ்வார் திருவுருவத்தை அர்ச்சக வடிவமாக அமைத்துப் பெருமாள் திருக்கோயிலின் உள்ளேயே எழுந்தருளப் பண்ணினர். அதற்கு வேண்டும் அமைப்புகளையெல்லாம் செவ்வனே செய்து முடித்தார். நாளும் நம்மாழ்வார் படிமத்துக்கு நறுமண மலர்மாலை சூட்டி, சேவிப்பார். குறிப்பிட்ட காலங்களில் விழா எடுத்துச் சிறப்பிப்பார். இவ் விழாக்களின்போது 'வேதம் தமிழ் செய்த மாறர் வந்தார், திருமாலுக்குரிய தெய்வப் புலவர் வந்தார், ஞானப் பெருமான் வந்தார், நல்பொருள் நாதர் வந்தார்' என்பன போன்ற விருதுகளை அடியார்களுடன் இவரும் சேர்ந்து முழக்கி வீதி வலம் வருவார்.

### சங்கத்தார் எதிர்ப்பு

ஒருமுறை இவ்வாறு விருதுகள் முழக்கி வரும் போது, மதுரைச் சங்கத்து மாணாக்கர்கள் இவர்களை எதிர்த்து, "உங்கள் ஆழ்வார், பக்தர்தானே? அவர் இறைவர் அல்லரே. அவர் சங்கம் ஏறிய புலவர் ஆவரோ? அவர் பாடிய திருவாய்மொழி சங்கம் ஏற்ற செய்யுளும் அல்லவே. எனவே நீங்கள், புலமை மிக்க எங்கள் பக்கம் இவ்வாறு விருதுகள் கூறிச் செல்லுதல் தகாது" எனக் கூறித் தடுத்தனர்.

மதுரகவியார் சங்கத்தார் எதிர்ப்பைக் கண்டு வருந்தினர். அவர்கள் கடுஞ்சொற்கள் கேட்டு அவர் நெஞ்சம் அளவிலாத் துன்பம் கொண்டது. அவர் ஆழ்வார் பெருமானைப் பிரார்த்தித்து, "இச்சங்கத்தார் கொண்டுள்ள இறுமாப்பு ஒழியத் தேவரீர்

அருள் கூர்தல் வேண்டும்'' என வேண்டிக் கொண்டார்.

### ஆழ்வார் அருள்கூர்தல்

நம்மாழ்வார் ஒரு கிழ அந்தணர் வடிவத்தோடு மதுரகவியார் முன்தோன்றி, ''திருவாய்மொழியில் 'கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர், எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே' என்ற பாசுரத்தின் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதி, அதைக் கொண்டு சென்று சங்கப் பலகையில் வைத் தால் அவர்கள் இறுமாப்பு தகர்ந்தொழியும்'' என அருளி மறைந்தார்.

இதுகேட்டு மகிழ்வுற்ற மதுரகவியார், அவ்வாறே, 'கண்ணன் கழலிணை' என்ற பாசுரத்தின் முதலடி எழுதிய ஏட்டை எடுத்துச் சென்று சங்கப் பலகையில் வைத்தார். உடன்தானே சங்கப் புலவர்கள் அமர்ந் திருந்த பலகை பொற்றாமரைப் பொய்கையில் மூழ் கியது. புலவர்கள் அனைவரும் நீரில் வீழ்ந்தனர். பின்னர் அப்பலகை மதுரகவியார் வைத்த ஏட்டை மட்டும் ஏந்திக் கொண்டு நீர்மேல் மிதந்தது.

### சங்கத்தார் பிழை உணர்தல்

நீரில் வீழ்ந்த சங்கப்புலவர்கள் தத்தளித்துத் தடு மாறி மெல்ல நீந்திக் கரை சேர்ந்தனர். அப்போது தான் அவர்களுக்குச் சடகோபர் தெய்வ அருளும், அவர் அருளிய பிரபந்தச் சிறப்பும் தெரியலாயின. ஆழ்வாருக்கு ஏற்பட்டிருந்த புலமை தெய்வீகமானது என்பதை உணர்ந்தனர். தாம் செய்த பிழைக்கு

வருந்திக் கழிவிரக்கம் கொண்டனர். அவர்கள் இறுமாப்புத் தகர்ந்தது. தம் பிழை நீங்கும் பொருட்டு அவர்கள் ஆழ்வாரின் தெய்வத் திருவருளைக் குறித்து ஒவ்வொருவரும் தனித் தனித் துதிப்பாடல் எழுதி வெளியிட்டனர். இவ்வாறு அவர்கள் பாடி வெளியிட்ட பாடல்கள் அனைத்தும்,

**"சேமம் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ**
**நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமம்**
**துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்**
**உளவோ பெருமான் உனக்கு"**

என்ற பாடலைப்போல் வேற்றுமை எதுவுமின்றி ஒன்று போல் இருப்பதைக் கண்டு வியப்புக் கொண்டார்கள், "என்னே வியப்பு! என்னே புதுமை! இது ஆழ்வார் பெருமான் திருவருளால் ஆன செயலேயாகும்!" என்று போற்றிப் புகழ்ந்தனர். பலபடப் பாராட்டினர்.

**புலவர்கள் பாடிப் பணிதல்**

சங்கத்துச் சான்றோரின் தலைவராய் விளங்கிய பெரும்புலவர் தாங்கள் நடந்து கொண்ட தவறான செயலுக்கு மனம் மிக வருந்தியும் ஆழ்வார் திருவருளை வியந்தும்,

**"ஈயா டுவதோ கருடற் கெதிரே?**
**இரவிக் கெதிர்மின் மானியா டுவதோ?**
**நாயா டுவதோ உறுவெம் புலிமுன்?**
**நரியா டுவதோ நரகே சரிமுன்?**
**பேயா டுவதோ அழகூர் வசிமுன்?**
**பெருமான் வகுளாபரணன் அருள்கூர்ந்(து)**
**ஓவா துரையா யிரமா மறையின்**
**ஒருசொற் பெறுமோ உலகிற் கவியே!"**

என்று பாடிப் பாராட்டினர்.

இவ்வண்ணம் நம்மாழ்வார் பெருமானை ஏற்றிப் போற்றிய புலவர்கள், பின்னர் மதுரகவியாரிடம் மட்டற்ற மதிப்புக் கொண்டு, "ஆழ்வார் பெருமான் பேரருளை எங்களுக்குப் புலப்படுத்திய பெருந்தகையீர், தாங்கள் இனி, தங்கள் ஆச்சாரியார் பெருமையினை அகிலமெல்லாம் அறியும் படி செய்வீராக!" என வேண்டிக் கொண்டனர்.

மதுரகவியார் முன்னினும் பன்மடங்கு சிறப்பாக நம்மாழ்வார் விழாவினைக் கொண்டாடி வரலானார். தம் ஆச்சாரியப் பெருமான் அருளிய அருமறைத் தத்துவங்களை மக்களெல்லாம் உணர்ந்து உய்வுபெற உரையாற்றி வந்தார். இவ்வாறு மதுரகவியார் நம்மாழ்வார் திருவடித் தொண்டராய்த் தொண்டுகள் செய்து திருக்குருகூர் பதியிலே எழுந்தருளி இறுதியில் பரந்தாமன் திருவடிப் பேறடைந்தார்.

### வாழ்த்துப் பாடல்

**சித்திரையிற் சித்திரைநாள் சிறக்கவந்தோன் வாழியே**
**திருக்கோளூர் அவதரித்த செல்வபிரான் வாழியே**
**உத்தரகங் காதீரத் துயர்தவத்தோன் வாழியே**
**ஒளிர்கதிரோன் தெற்குதிக்க உவந்துவந்தோன் வாழியே**
**பத்தியுடன் பதினொன்றும் பாடினான் வாழியே**
**பராங்குசனே பரனென்று பற்றினான் வாழியே**
**மத்திமமாம் பதப்பொருளை வாழ்வித்தான் வாழியே**
**மதுரகவி திருவடிகள் வாழிவாழி வாழியே!**

முற்றியது

